து இம்மைமறுமைக்கும் உறுதிப்பயனைக்கொடுப்பதாமென்று சொல்லச் சோழராசன் அதைக்கேட்டு-என்க.

அவகதையாய்ப்பயனற்றகதையீதாகி-லம்மையு மிம்மையு முறுதிபயக்கத்தக்க, சிவகதையேதுகற்றதிறமைப்பேரார் சீவகசிந்தாமணிபோலிடையில்வந்த, நவகதையோபுராதனமோ முன்னூலுண்டோநானிலத்துச் சொன்னவரார்கேட்டபேரார், தவகதையோதவம்பண்ணிப் பேறுபெற்ற தனிக்கதையோ வடைவுபடச்சாற்றுமென்றான். (௰௨)

இ-ள். இதுஅவலமானதாய்ப் பிரயோசனமற்ற வீண்கதையாகில் இம்மைமறுமைப்பயன்களைக் கொடுக்கத்தக்க சிவகதையென்பது யாது அதைக்கற்றுணர்ந்த திறமையுடையவர்யாவர் இந்த சீவக சிந்தாமணியைப்போலே மத்தியில்வந்த புதியகதையோ அல்லதுபழமையானதோ அதற்குமுதனூலொன்றுண்டோ அக்கதையை இவ்வுலகத்திற் சொன்னவர்கள்யாவர்கேட்டவர்கள்யாவர்தவகதையோஅல்லது தவத்தைச்செய்து பேறுபெற்ற ஒப்பற்றகதையோ அதைக்கிரமமாகச் சொல்லுமென்று சோழமகாராஜாகேட்டனர்-என்க.

செம்பியர்பூபதி மகிழ்ந்துவினவிக்கேட்கச் சேக்கிழார்குரிசிலுரைசெய்வார்ஞாலத், தம்பலவர்திருத் தொண்டர் பெருமையாரூரடிகண் முதலடியெடுத்துக்கொடுக்கநாவ, னம்பிதிருத்திருப்பாட்டாகச் செய்தநலமலிதொண்டத் தொகைக்கு நாரையூரிற், றும்பிமுகன்பொருளுரைக்கநம்பியாண்டார்சுருதி மொழிக்கலித்துறையந்தாதிசெய்தார். (௰௩)

இ-ள், சோழமகாராஜா மனமகிழ்ந்துவினவிக்கேட்க சேக்கிழார் சுவாமிகள்சொல்லுகின்றார் உலகத்தின்கண் பரமசிவத்தினடியார்களது பெருமையைச்சொல்வதற்குத் திருவாரூர்த்தியாகப் பெருமான் தில்லைவாழந்தணரொன்று முதலடி யெடுத்துக்கொடுத்தருளத்திருநாவலூர்ச் சுந்தரமூர்த்திசுவாமிகள் பதினொருதிருப்பாடலாகப் பாடியருளியநன்மைமிக்கதிருத்தொண்டத்தொகைக்குத்திருநாரையூரில் வீற்றிராநின்ற பொல்லாப்பிள்ளையார் பொருள்சொல்லி யருளியவாறு அதனையுணர்ந்து நம்பியாண்டார்வேத வாக்கியமாகிய கலித்துறை யந்தாதி செய்தனர்-என்க.

ஆயுமறைமொழி நம்பியாண்டார்நம்பி-யருள்செய்த * கலித்துறையந்தாதிதன்னைச், சேயதிருமுறைகண்ட ராசராசதேவர்

* இனி உரையுடன் அச்சிடப்படும்,

சிவாலயதேவர்முதலாயுள்ள, ஏயகருங்கடல்புடைசூழுலகமெ லலா-மெடுத்தினிதுபாராட்டிற்றென்னவந்தத், தூயகதையடை வுபடச்சொல்லியொன்று சோழனுரை செயக்கேட்டுக் குன்றை வேந்தர். (௰௪)

இ-ள். ஆராய்ச்சிசெய்யும் வேதமொழியையுணர்ந்த நம்பியாண் டார் நம்பியருள்செய்த கலித்துறையந்தாதியைச் செவ்வியதிருமுறை கண்டசோழராகிய ராஜராஜதேவர் சிவாலயதேவர் ஆதியாயுள்ளவர்க ளும் சமுத்திரத்தாற்சூழப்பட்ட உலகத்தார்யாவரும் போற்றியன்புட ன்பாராட்டிக்கொண்டு வந்தார்களென்றுசொல்லத் தெய்வத்தன்மை யுள்ள அச்சரித்திரத்தை முறைமையாகச் சொல்லவேண்டுமென்று சோழமகாராஜாகேட்க அதனைக்கேட்டு சேக்கிழார்சுவாமிகளென்க.

தில்லைவாழந்தணரேமுதற்பண்பாடு-திரு நீலகண்டத்துப் பாணரீறுச், சொல்லியதொண்டத்தொகைநூல வகையந்தாதித் தொடர்ச்சியினைவிரித்துரைக்கவளவன்கேட்டு, மெல்லியலாள் பங்கர்திருவருளைநோக்கிவியந்தடிமைத்தொண்டுசெய்துபேறு பெற்ற, செல்கதியைநினைந்துருகிவளவர்கோமான் சேவையர் காவலனைமுகநோக்கிச்சொல்வான். (௰௫)

இ-ள். தில்லைவாழந்தணர்முதல் இசைநூலில்வல்ல திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஈறுகச்சொல்லிய திருத்தொண்டத்தொகைப் பதிகத்தி ற்குவகைநூலாகிய நம்பியாண்டார் நம்பிதிருவந்தாதித் தொடர்பினை விரிவாயெடுத்துச்சொல்ல அதனைசசோழ மகாராஜாகேட்டு பார்வதி பாகராகிய பரமசிவத்தின் திருவருளைநோக்கி அதிசயித்து அடிமைத் தொண்டுசெய்து சிவபோகப் பேற்றினையடைந்த முன்னையகதியை நினைந்து மனமுருகிச்சோழமகாராஜா சேக்கிழார்சுவாமிகள் திருமுக த்தைப்பார்த்து கூறுகின்றாராக-என்க,

அவரவர்களுடைவர்களிருந்தவூர்வந்-தவதரித்ததிருமரபுதி ருப்பேர்செய்த, சிவசமயத்திருத்தொண்டுமுற்பிற்பாடு-சிவன டிக்கிழுயர்பரமமுத்திபெற்றோர், எவருமறியச் சீவன்முத்தரா யிங்-கிருப்பவர்களினிமேலும்பிறப்போர்மண்மேல், அவர்களை சசேர்ந்தருள்பெற்றோர்பகைத்துப்பெற்றோ-ரவர்கள்பகையாய் நரகிலடைந்தபேர்கள். (௰௬)

இ-ள். அந்தந்த அடியார்கள் அவதரித்த நாடுகளும் அவர்களிருந்த வூர்களும் திருமரபுகளும் பெயர்களும் சைவசமயத்தில் செய்த

கொண்டிருந்த திருத்தொண்டும் முற்காலத்திலும் பிற்காலத்திலும் பரமசிவத்தின்திருவடிக்கீழ் சிறந்தபர முத்தியைப் பெற்றவர்களும் யாவரும் அறியும்படி ஜீவன்முத்தர்களா யிங்கிருப்பவர்களும் உலகின்கண் இனிப்பிறப்பவர்களும் அவர்களையடைந்து திருவருளைப்பெற்றவர்களும் சிவனடியார்களைப்பகைத்து கதியடைந்தவர்களும் அவர்களுக்குப்பகைவராய் நரகமடைந்தவர்களும்-என்க.

இல்லறத்திலிருந்துநனிமுத்திபெற்றோரில்லறத்திற்சிற்றின்பவியல்பைநீக்கி,நல்லறமாந்துறவறத்தினின்றுபெற்றோர்நற்பிரமசாரிகளாயருள்பெற்றுய்ந்தோர், செல்கதிசற்குருவருளாற்சென்றுசேர்ந்தோர்சிவபூசைசெய்துபரமுத்திபெற்றோர், புல்லறிவுதவிர்ந்து திருவேடமேமெய்ப் பொருளெனக்கொண்டரனடிக்கீழ்ப்பொருந்தப்புக்கோர். (௰எ)

இ-ள். இல்லறத்திலிருந்து பெரியமுத்தியையடைந்தவர்களும் இல்லறத்திற்குரியசிற்றின்பச்செய்கையைநீக்கிஉத்தமதருமமாகிய துறவறத்திலிருந்து முத்தியடைந்தவர்களும் நல்லபிரமசாரிகளாகவேயிருந்து அருள்பெற்றுக்கரையேறினவர்களும் செல்லத்தக்ககதியை ஞானாசாரியராதுதிருவருளாலடைந்து பெற்றவர்களும் சிவபூசையைச் செய்து பரமுத்தியடைந்தவர்களும் அஞ்ஞானம் நீங்கிச்சிவவேடமேயுண்மைப்பொருளெனமனத்திற்கொண்டு சிவனடிக்கீழ்பொருந்தச்சென்றவர்களும்-என்க.

இப்படியேயடைவுபடப் பிரித்துக்கேட்டால் யாவருக்குமேதரிக்கச்செவிகாநீட்ட, வொப்பரியபொருடெரிந்துவிளங்கித்தோன்றவுவமையுடைத்தாயகதைகற்கநிற்கத், தப்பில்பெருங்காவியமாவிரித்துச் செய்துதருவீரென்றவர்க்கு விடைகொடுத்துவேண்டுஞ், செப்பரியதிரவியமுங்கொடுக்கவாங்கிச் சேக்கிழார்குரிசில்திருத்தில்லைசேர்ந்தார். (௰அ)

இ-ள். ஆகிய இவர்கள் சரித்திரத்தை இவ்வாறுகிரமமாகத் தனித்தனிகேட்கப்புகுங்கால் எல்லோருக்கும் மனதிற்றரிக்கவும் காதுகொடுத்துக் கேட்கவும் நாவினாற்பிறருக்குச் சொல்லவும் ஒப்பற்றஅப்பொருளானது விளக்கமுற்றுத் தோன்றவும் தனக்குத்தானே யுவமையுடையதாகிய இச்சரித்திரம் யாவரும் கற்றுணரவும் என்றைக்குநிலை நிற்கவும் குற்றமற்றபெரியகாவிய ரூபமாகவிரிவா யியற்றிக்கொடுத்தருள்வீரென் றுத்தரவுகொடுத்து அதற்குவேண்டியதிரவியமுங்கொடுக்கப் பெற்றுக்கொண்டு சேக்கிழார்சுவாமிகள் திருத்தில்லைக்கண் வந்துசேர்ந்தனர்-என்க.

வேறு.

தில்லையெல்லையில்வந்துவந்தெதிர்தெண்டனுகவீழ்ந்தெழுந்
தல்லிசேர்கமலத்தடத்தினின்மூழ்கியம்பலவாணர்முன்
னெல்லைசென்றுபணிந்துகைத்தலமுச்சிவைத்துளமுருகிநைந்
தெல்லைகாணரிதாயபேரொளியின்பவாரியின்மூழ்கியே. (௰௬)

இ-ள். ஸ்ரீ சிதம்பரத்தின் எல்லையைச்சேர்ந்து அஷ்டாங்கபஞ்சாங்கமாக நமஸ்கரித்தெழுந்து அகவிதழ்களையுள்ள தாமரைமலர் நிறைந்த சிவகங்கையில் ஸ்நாநஞ்செய்து நடேசமூர்த்தி சந்நிதானத்திற்கு முன் விரைவாய்ச்சென்று வணங்கி இரண்டு கைகளையுஞ் சிரசின்மேல் வைத்துக்கொண்டு மனமுருகிக்கசிந்து அளவுகாணுதற்கரிதான அகண்டதேஜோமய சிவானந்தக் கடலில்மூழ்கி-என்க.

அடையலார்புரநீறெழத் திருநகைசெய்தன்றொருமூவரைப்
படியின்மேலடிமைக்கொளும்பதபங்கயங்கள்பணிந்துநின்
றடிகளேயுனதடியர்சீரடியேனுரைத்திடவடியெடுத்
திடர்கெடத்தருவாயெனத்திருவருளையெண்ணியிறைஞ்சினார்.

இ-ள். தன்னையடையாதவர்களுடைய திரிபுரங்கள் நீறும்படிப்புன்னகைசெய்து அக்காலத்தில் ஒப்பற்ற அம்மூவர்களையும் நிலவுலகத்தில் அடிமைகொண்டருளிய (சிவபெருமான்) திருவடித்தாமரைகளை வணங்கிநின்று ஆண்டானே உன்னடியார்கள் சிறப்பினை அடியேன்கூறுதற்கு என்வருத்தம் நீங்கும்படி முதலடியெடுத்துத் தந்தருள்வாயென்று பரமசிவத்தின் திருவருளை நினைந்து வணங்கினர்-என்க.

அலைபுனற்பகிரதிநதிச்சடையாடவாடரவாடநின்
றிலகுமன்றினிலாடுவார்திருவருளினாலசரீரிவாக்
குலகெலாமெனவடியெடுத்துரைசெய்தபேரொலியோசைமிக்
கிலகுசீரடியார்செவிப்புலத்தெங்குமாகிநிறைந்ததால். (௨௧)

இ-ள். அலைகின்றசலத்தை யுடையகங்காநதி சடையினிடத்தாடவும் படத்தைவிரித்தாடுகின்ற பாம்பணிகளாடவும் நின்று பிரகாசியாநின்ற சிற்சபையினிடத்து நிருத்தஞ்செய்தருளுகின்ற நடேசமூர்த்தி கிருபாகடாக்ஷத்தினால் உலகெலாமெனமுதலடி யெடுத்துக் கொடுத்தருளின அசரீரிவாக்காகிய பேரோசையானது அதிகரித்து சிறப்புமிக்க அங்கங்குமிருக்கும் அடியார்கள் செவிப்புலமெங்கும் நிறைந்தது-என்க.

தில்லைமாநகர்வாழவாழ்தவசிந்தையந்தணராறைஞ்ஞூ
றல்லதும்பலமடபதித்தவராசரிக்கையிலுள்ளபேர்
எல்லையில்லவரியாவருங்களிகொளவிளங்கசரீரிவாக்
கொல்லைவந்தெழவனைவருங்கரமுச்சிவைத்துளமுருகினர். ()

இ-ள். தில்லைக்ஷேத்திரமானது வாழும்படி நிலைபெற்றுள்ளதவச் சிந்தையுடைய மூவாயிரவர்களும் இவர்களல்லாமலும் அநந்தமடபதிகளும் துறவிகளும் இன்னுமநேகம் பேர்களும் களிப்படையும்படிவெளியே எழுந்த அசரீரிவாக்கானது விரைவுடன் உண்டானபோது யாவரும் இரண்டுகைகளையு முச்சியின்மீது அஞ்சலியாகக் குவித்துக கொண்டு மனமுருகினர்கள்-என்க.

உள்ளலார்புரநீறெழக்கணையொன்றுதொட்டுயர்மன்றில்வாழ்
வள்ளலார்திருமாலையுந்திருநீறுமெய்ப்பரிவட்டமும்
எள்ளலாரலவொன்றுசேவையர்காவலர்க்கிவையினிதளித்
தள்ளலார்வயனீடுதில்லையிலனைவருங்களிகொண்டபின். (உரு)

இ-ள். பகைவர்புரங்கள் நீறுரும்படி ஒருகணையையேவி சிறப்புள்ள சிற்சபையினிடத்து எழுந்தருளியுள்ள நடேசமூர்த்திக்குச் சாதியபுட்பமாலையும் விபூதியும உண்மையாகிய பரிவட்டமும் ஆகியவிதுகளைத் தரிப்பதற்குத்தக்கவரொன்று சேச்கிழார்சுவாமிகளுக்கு இவற்றையன்புடனளித்து சேறுபொருந்தியவயல்வளமிக்க அத்தில்லையின் கண்யாவரும்களிப்பினையடைந்த பின்னர்-என்க.

சேவைகாவலர்தொண்டர்சீருரைசெய்வதற்குயர்செய்யுண்முன்
மூவரோதியதிருநெறித்தமிழாதலால்வரன்முறைமையால்
யாவரும்புகழ்திருநெறித்தலைவரைவணங்கியிணங்கிமெய்த்
தாவருஞ்சிவசாதனங்கடரித்துநீறுபரித்தரோ. (உசு)

இ-ள். சேக்கிழார்சுவாமிகள் அடியார்களது சிறப்பையெடுத்துச் கூறுவதற்கு உயர்ந்தமுன்னூல முறகாலத்தில் திருஞானசம்பந்தசுவாமிகள் முதலிய மூவரும் ஓதியருளிய திருநெறித்தமிழ் வேதமாதலால வரலாற்றுமுறையே அனைவரும்துதிக்கின்ற அம்மூவரையும்வணங்கிச் சிவநேச சம்பந்தியாய் உண்மை நீங்காத விபூதிருத்திராட்சமுதலிய சிவசாதனத்தைத் தரித்துக்கொண்டு-என்க.

வந்துசூழ்நிரைத்தவையிருநூறுகான்மணிமண்டபத்
தெந்தையார்திருவருளையுன்னியிருந்துசேவையர்காவலர்

செந்தமிழ்த்தொடையால்விளங்கியதிருவிருத்தமிருத்தனுர்
ந்தசொன்முதலாவெடுத்தனர்தானுவானபுராண நூல். (உ௫)

இ-ள். சுற்றிலும்நிரைத்துள்ள ஆயிரக்கால் மண்டபத்திலங்கண் வந்து பரமசிவத்தின் திருவருளைநினைந்து வீற்றிருந்து சேக்கிழார் சுவாமிகள் செவ்வியதமிழ்மாலையால் விளக்கமுற்ற திருவிருத்தத்தை நடேசமூர்த்தி யெடுத்துக்கொடுத்தருளின சொல்லை முதலாகக்கொண்டு சிவரூபமாகிய புராணஞ்செய்யத் தொடங்கினர்-என்க.

வேறு.

திருமறையோர் புராணமவைபதின்மூன்று சிவவேதி
யரானவழிபட்டபுராணமீரிரண்டு, குரைகழன்மாமாத்தி
ரரொன்றறுவர்முடிமன்னர்குறு நிலமன்னவரைவர்வணிக
ர்குலத்தைவ, ரிருமைநெறிவேளாளர்பதின்மூவரிடையரி
ருவர்சாலியர் குயவர்தயிலவினையாளர், பரதவர்சான்றார்
வண்ணார்சிலை மறவர்நீசர் பாணரிவரோ ரொருவராம்பக
ருங்காலே. (உ௬)

இ-ள். சொல்லுமிடத்து அடியார் அறுபத்துமூவருள் வைதிக பிராமணர்களாகிய அடியார்புராணம் பதின்மூன்று பரமசிவத்திற்கு த்தொண்டுசெய்து மூத்திபெற்றசிவாசாரியர் புராணம்நான்கு சத்திகா நின்ற வீரகண்டையணிந்த மாமாத்திரரொன்றும் பிராமணகுலத்தடியவர்புராணம் ஒன்று க்ஷத்திரியவம்சத்தராகிய அடியார்புராணம் ஆறு குறுநிலமன்னவராகிய அடியார்புராணம் ஐந்துவைசியகுலத்தராகிய அடியார் புராணம்ஐந்து இம்மைமறுமைக்குரிய நல்லொழுக்கத்தையுடைய வேளாள மரபினராகிய அடியார்புராணம் பதின்மூன்று இடையாகுலத்தவராகிய அடியார் புராணம் இரண்டு சாலியர், குயவர், செக்கார், பரதவர், சான்றார், வண்ணார், வில்லையுடையவேடர், நீசர், பாணர், ஆகிய இம்மரபினராகிய அடியார் புராணம் தனித்தனி ஒவ்வொன்று-என்க.

அறுதிபெறத்திருமரபு குறித்துரையாப்புராண மவை
களொருபதின்மூன்றுதிருக்கூட்டந்தன்னின், மறுவிலவர்
பதியறிந்தகதையிரண்டுவந்தமரபறிந்தகதையிரண்டுபேர
றிந்தகதையொன், றுறுமரபுதெரியாப் புராணமவையோ
ரே-மூரறியாக்கதையேழுபேரறியாக்கதையெட், டிறுதியி
லக்கங்கண்ட திருக்கூட்ட மொன்றெண்ணித் தனையென்
றறியாத திருக்கூட்டமெட்டே. (உ௭)

இ-ள். நிச்சயித்த மரபினைத்தெரிந்து சொல்லப்படாத அடியார்புராணம்பதின் மூன்று அடியார் கூட்டத்தில் குற்றமற்ற அவரது க்ஷேத்திரந் தெரிந்தபுராணம் இரண்டு அவர்திருவவதாரஞ்செய்த மாபுதெரிந்தபுராணம் இரண்டு அவர் திருப்பேர்தெரிந்த புராணம் ஒன்று, அவதரித்த மரபறியப்படாத அடியார் புராணம் ஏழு உளர்தெரியாத அடியார் புராணம் ஏழு அவர்கள் திருப்பேர்தெரியாத புராணமெட்டு முடிபுத் தொகைகண்ட திருக்கூட்டத்து அடியார் புராணம் ஒன்று இவ்வளவென்று எண்ணிக்கை யறியப்படாத திருக்கூட்டத்து அடியார் புராணம் எட்டு-என்க.

தில்லைமறையோர்கலயர்முருகர்பசுபதியார்சிறப்புலியார்
கணநாதர்பூசலைசண்டேசர், கல்விநிறைசோமாசி மாறர்நமிநந்தி-கவுணியனாரப் பூதிநீல நக்கராகச், செல்வமறை
யோர்காதைபதின் மூன்றுசிவவே-தியர்காதையிரண்டு புகழ்த்துணையார் முப்போதும், வல்லபடிசிவனையருச்சிப்பார்கண்மாமாத் திரர்மரபிற் சிறுத்தொண்ட ரொருவர்முடிமன்னர். (உ௮)

இ-ள். தில்லைவாழந்தணர்கள் கலயர் முருகநாயனார் பசுபதியார் சிறப்புலிநாயனார் கணநாதநாயனார் பூசல்நாயனார் சண்டேசநாயனார் ஞானமிக்கசோமாசிமாறநாயனார் நமிநந்தியடிகள் திருஞானசம்பந்த சுவாமிகள் அப்பூதியடிகள் நீலநக்கநாயனார் என்னும் செல்வமிகுந்த பிராமணகுலத்து அடியவர் புராணம் பதின்மூன்றும் புகழ்த்துணை நாயனார் தகுந்தவாறுதிரிகாலங்களிலும் பரமசிவத்தை அருச்சனைசெய்கின்ற முப்பொழுதுந்திருமேனி தீண்டுவாராகிய சிவவேதியர் புராணம் இரண்டாம் மாமாத்திரர் மரபில் திருவவதாரஞ்செய்தருளிய சிறுத்தொண்ட நாயனார் புராணம் ஒன்றும் அரசர்களாவார்-என்க.

அறுவரொவரவர்செங்கட்சோழர்புகழ்ச்சோழ - ரருண்
மானியிடங்கழியார்நெடுமாறர்சேரர், குறுநிலமன்னவரைவர் நரசிங்கமுனையர் கூற்றுவனார்கழற் சிங்கர்மெய்ப்பொருளாயடிகள், முறைமைவணிகரிலைவர்காரைக்காலம்மைமூர்த்திகலிக்கம்பரமர்நீதியியற்பகையார், திறமைவிரிவேளாளர்பதின்மூவர்மூர்க்கர்செருத் துணையார்வாயிலார் கோட்புலியார்சத்தி. (உகூ)

இ-ள். அக்கிரீடந்தரித்த அரசர்ஆறுபேர்யாவரெனின்யோச்செங்கட்சோழநாயனார் புகழ்ச் சோழநாயனார் அருள்நிறைந்த மானியார்

இடங்கழிநாயனார் நின்றசீர்நெடுமாறநாயனார் சேரமான்பெருமாள் நாயனார்ஆகிய இவர்கள் புராணம் ஆறும் நரசிங்கமுனையநாயனார் கூற்றுவநாயனார் கழற்சிங்கநாயனார் மெய்ப்பொருள்நாயனார் ஐயடிகள்காடவர்கோன் ஆகிய குறுநிலமன்னவர்புராணம் ஐந்தாம் காரைக்கால்அம்மையார் மூர்த்திநாயனார்கலிக்கம்பநாயனார் அமர்நீதிநாயனார் இயற்பகைநாயனார் ஆகியவைசியர் புராணம் ஐந்தாம் மூர்க்கநாயனார் செருத்துணைநாயனார் வாயிலாநாயனா கோட்புலி நாயனார்சத்திநாயனார்-என்க.

தாயனாரிளையான்றன் குடிமாறரரசுசாக்கியர் கஞ்சாறர்
விறன்மிண்டர்முனையடுவா, ரேயர்கோன்கலிக்காமர்கோ
பாலர்மரபிலிருவர் திருமூலனாரானாயர்குயவர், சேயபுகழ்
த்திரு நீலகண்டனார்பாணர்திருமரபிற்றிருநீலகண்டத்து
ப்பாணர், மேயதிறலதிபத்தர்பரதவர்கண்ணப்பர் வேடர்
மரபினிற் சான்றாரேனாதிநாதர். (௯௰)

இ-ள். வேதாயனார் நாயனார் இளையான்குடிமாற நாயனா திருநாவுக்கரசுசுவாமிகள் சாக்கியநாயனா மானக்கஞ்சாறநாயனார் விறன்மிண்டநாயனார் முனையடுவார்நாயனார் ஏயர்கோன்கலிக்காமநாயனார் ஆகியவேளாளர் புராணம் பதின்மூன்றும் திருமூலநாயனார் ஆனாயநாயனார் எனஆயர்குலத்தவர் புராணம் இரண்டாம் செவ்விதாகிய புகழையுடைய குயவர்குலத்தவராகிய திருநீலகண்டநாயனார் திருநீலகண்டயாழ்ப்பாணர் வெற்றிபொருந்தியபரதவர் குலத்தவராகிய அதிபத்தநாயனார் வேடர்குலத்தவராகிய கண்ணப்பசுவாமிகள் சான்றார் குலத்தவராகிய ஏனாதிநாயனார்-என்க.

நேசனார் சாலியரிற்றிருநாளைப் போவார்நீசர் மரபினி
லெங்கடிருக்குறிப்புத்தொண்டர், தூசொலிக்குமேகாலி
மரபுதிலதயிலத் தொழின்மரபிற் கலியனார்மரபு குறித்து
ரையாக், காசில்கதைபதின்மூன்று குலச்சிறையார்தண்டி
கணம்புல்லரெறிபத் தர்காரியார்குறும்பர், தேசுடையபத்
தர்பரமனைப்பாடுவார்கள் சித்தத்தைச்சிவன்பால்வைத்தா
ராரூர்ப்பிறந்தார். (௯௧)

இ-ள். சாலியகுலத்தவராகியநேசநாயனார் பஞ்சமகுலத்தவராகிய திருநாளைப்போவார் நாயனார் ஏகாலிக்குலத்தவராகிய எமது திருக்குறிப்புத்தொண்டநாயனார் செக்கார்குலத்தவராகிய கலியநாயனார் என்று இவர்கள் புராணம் தனித்தனி ஒவ்வொன்றும் மரபினைக்குறி

த்துச் சொல்லாத நல்லபுராணம் பதின்மூன்று (அவையாவன) குலச்சிறைநாயனார் தண்டியடிகள் கணம்புல்லநாயனார் எறிபத்தநாயனாகாரிநாயனார் பெருமிழலைக்குறும்பநாயனார் ஞானப்பிரகாசராகியபத்தராய்ப்பணிவார் பரமனையேபாடுவார் சித்தத்தைச் சிவன்பால்வைத்தவர்கள் திருவாரூர்ப்பிறந்தவர்கள்-என்க.

செப்பரிய பொய்யடிமையில்லாதார் மெய்யிற்றிருநீறு
பூசுமுனிவர்களுலகுதன்னி, லப்பாலுமடிச்சார்ந்தாரிவர்
கட்மிற்சிலபே-ராய்ந்த தமிழ்ப்பேர்சிலபேர் மலையாளர்சி
லபேர், தப்பாததெலுங்கர்சிலர் மற்றுளதேசத்தோர் தவ
ஞ்செய்துபரகதியை யடைந்தவர்கள்சிலபே, ரிப்போது
மிருந்தரனைவழிபடுவோர்சிலபே-ரினிமேலுந்திருமேனி
கொடுவருவோர்சிலரே. (௯௨)

இ-ள். சொல்லுதற்கரிய பொய்யடிமையில்லாதபுலவர்கள் திருமேனிமுழுதுந் திருநீறுபூசுமுனிவர்கள் இவ்வுலகத்தில் அப்பாலும் அடிச்சார்ந்தாராகிய இவர்புராணங்களாம் இவர்களுள் சிலபேர்தமிழ்நாட்டோர் சிலர்மலையாளதேயத்தோர் சிலர்தெலுங்குதேயத்தோர் சிலர் மற்றதேசத்திலுமுள்ளவர்களாம் தவத்தைச்செய்து பரமுத்தியையடைந்தவர்கள்சிலபேர் இக்காலத்திலும் இருந்து பரமசிவத்திற்குத்தொண்டுசெய்பவர்கள்சிலபேர் இனிமேலும் அவதாரஞ்செய்து வருபவர்கள் சிலபேர்களாம்-என்க.

திருஞானசம்பந்தர்திருநாவுக்கரையர்திருமூலர்நெடுமா
றர்மங்கையருக்கரசி, கரைசேருங்குலச்சிறையார் யாழ்ப்
பாணர் குறும்பர் கணநாதரப்பூதி சோமாசிமாற, ருமா
சேருமிவர்கள்பதினொருவர்குருவருளாலுயர்முத்தியடை
ந்தவர்களெறிபத்தர்கலயர், முருகனார்கண்ணப்பராவுயர்
தாயர்மூர்த்தியார் சண்டேசர்திருநாளைப்போவார். (௯௩)

இ-ள். திருஞானசம்பந்தசுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளுந்திருமூலநாயனாரும்நெடுமாறநாயனாரும் மங்கையர்க்கரசியாரும் முத்திக்கரைகண்ட குலச்சிறைநாயனாரும் திருநீலகண்டயாழ்ப்பாணரும்பெருமிழலைக்குறும்ப நாயனாரும் கணநாதநாயனாரும்அப்பூதியடிகளும் சோமாசிமாறநாயனாரும் புகழையுடைய பதினொருவராகிய இவர்கள்குருவருளினால் பரமுத்தியையடைந்தவர்கள் எறிபத்தநாயனாரும் குங்கிலியக்கலயநாயனாரும் முருகநாயனாரும் கண்ணப்பசுவாமிகளும் ஆனாயநாயனாரும் அரிவாட்டாயநாயனாரும் மூர்த்திநாயனாரும் சண்டேசநாயனாரும் திருநாளைப்போவார்நாயனாரும்-என்க

சேரனார்சாக்கியனார் கூற்றுவனார் தண்டி-சிறப்புலியார்ப
சுபதியார்கலிக்காமர்கலியர், காரியாரதிபத்தர்நீலநக்கர்பூ
சல்-கணம்புல்லர்கோட்புலியார்நமிநந்தியடிகள், சீருடை
யகழற்சிங்கர்வாயிலார்· தூயசெருத்துணையார் புகழ்த்து
ணையார்காடவனாயடிகள், மூரிநெடுவேற் செங்கட்சோழ
னாராக-முப்ப்துபேர்சிவலிங்கத்தான்முத்தியடைந்தோர்.

இ-ள், சேரமான்பெருமாள் நாயனாரும் சாக்கியநாயனாரும்கூற்றுவநாயனாரும் தண்டியடிகள்நாயனாரும்சிறப்புலிநாயனாரும் பசுபதிநாயனாரும் கலிக்காமநாயனாரும் கலியநாயனாரும் காரிநாயனாரும் அதிபத்தநாயனாரும் நீலநக்கநாயனாரும் பூசல்நாயனாரும் கணம்புல்லநாயனாரும் கோட்புலிநாயனாரும் நமிநந்தியடிகள்நாயனாரும் சிறப்பினையுடைய கழற்சிங்கநாயனாரும் வாயிலார்நாயனாரும் சுத்தம்பொருந்தியசெருத்துணை நாயனாரும் புகழ்த்துணைநாயனாரும் ஐயடிகள்காடவர்கோன்நாயனாரும் வலிமையுள்ளவேலாயுதத்தையுடைய கோச்செங்கட்சோழநாயனாரும் என்று இம் முப்பதுபேர்களும் சிவலிங்கத்தால் முத்தியடைந்தவர்கள்-என்க.

திருநீலகண்டனாரியற்பகையார் மூர்க்கர்சிறுத்தொண்
டர்திருக்குறிப்புத்தொண்டர்விறன்மிண்ட ரருள்சேருமி
டங்கழியார்முனையடுவார்சத்தி-யமர் நீதிமெய்ப்பொருளா
ரேனாதிநாதர், கரைசேரும்புகழ்ச்சோழர் கஞ்சாறர்மாறர்
காரைக்காலம்மைநரசிங்கர்கலிக்கம்பர், வருநேசராகவொ
ரு பத்தொன்பதடியார் மணிவேடத்தாரை வழிபட்டரனை
யடைந்தோர். (௩௫)

இ-ள். திருநீலகண்டநாயனாரும் இயற்பகைநாயனாரும்மூர்க்கநாயனாரும் சிறுத்தொண்டநாயனாரும் திருக்குறிப்புத்தொண்டநாயனாரும் விறன்மிண்டநாயனாரும் அருளைப்பெற்ற இடங்கழிநாயனாரும் முனையடுவார்நாயனாரும் சத்திநாயனாரும் அமர்நீதிநாயனாரும் மெய்ப்பொருள்நாயனாரும் ஏனாதிநாதநாயனாரும் முத்திபெற்ற புகழ்ச்சோழநாயனாரும் மானக்கஞ்சாறநாயனாரும் நின்றசீர்நெடுமாறநாயனாரும் காரைக்காலம்மையாரும் நரசிங்கமுனையநாயனாரும் கலிக்கம்பநாயனாரும் மெய்யன்புகைவ்ந்த நேசனார்நாயனாருமாகிய இப்பத்தொன்பது நிலைமையானபேர்களும் சிவனடியார்க்குத் தொண்டுசெய்து முத்தியடைந்தவர்கள்.

கவுணியர்நாவுக்கரசர்பேயாரிம்மூவர்கற்குமியலிசைவ
ல்லோரிசைத் தமிழ்நூல்வல்லோர், பவமனுகாத்திருநா

*ளைப்போவாரானையர்-பாணர்பரமனைப்பாடுவாராகநால்வர்*
*புவனிபுகழையடிகடிருமூலர் காரி பொய்யடிமையில்லாதத*
*மிழ்ப்புலவர்சேரர்-நவமுடையவிவரைவரியல்வல்லோர்நி*
*ன்ற-நாயன்மார்தவம்புரிந்துநற்கதிலயயடைந்தோர். (௩௬)*

இ-ள். திருஞானசம்பந்தசுவாமிகளும் அப்பர்சுவாமிகளும்காரை க்கா லம்மையாருமாகிய இம் மூவர்கள் கற்கும்படியான இயற்றமிழி லும் இசைத்தமிழிலும் வல்லவர்களாம் பிறவித்தமொற்றத்தை யடை யாததிருநாளைப் போவார்நாயனாரும் ஆனாயநாயனாரும் திருநீலகண் டயாழ்ப்பாணரும் பரமனைப்பாடுவார்களுமாகிய இந்நால்வா இசைத் தமிழில்வல்லவர்களாம் உலகத்தார்புகழாநின்ற ஐயடிகள் காடவர் கோன்நாயனாரும் திருமூலநாயனாரும் காரிநாயனாரும் பொய்யடி மையில்லாத தமிழ்ப்புலவரும் சேரமான்பெருமாள்நாயனாருமாகிய சிறப்பையுடையஇவ்வைவர் இயற்றமிழில்வல்லவர்களாம்மறற நாயன் மார்கள்திருத்தொண்டுசெய்துமேலானமுத்தியையடைந்தவர்களாம்

*இல்லறத்தினின்றவர்கடிருநீலகண்ட-ரியற்பகையாருள்*
*ளிட்டார் மூர்த்தியாரப்பர், நல்லதுறவறம் பிரமசாரிகள்ச*
*ண்டேசர் நானிலத்திலரனடியார் தங்களுடன் சேர்ந்து,*
*செல்கதி பெற்றவர்ஞானசம்பந்தருடனே திருமணத்தி*
*லொருமணமாய்ச்சேர்ந்தவர்களநேகர், பல்வளஞ்சேராரூ*
*ரருடன்சேரர்கையிற் - பரியுகைக்கவுடன்சென்றபரிசன*
*மெண்ணிறந்தோர். (௩௭)*

இ-ள். திருநீலகண்டர்இயற்பகையார்இன்னஞ்சிலர்இல்லறத்திலி ருந்து முத்தியடைந்தவர்களாம் மூர்த்திநாயனார் திருநாவுக்கரசுசுவா மிகள் நல்லதுறவறத்திலிருந்து முத்தியடைந்தவர்களாம் சண்டேச நாயனார் பிரமசரிய ஆசிரமத்திலிருந்து முத்தியடைந்தவராம் உலக த்தில் சிவனடியார்களுடன் கூடிமுத்தியடைந்தவர்கள்சிலர் அவர்கள் யாரெனில் திருஞானசம்பந்தசுவாமிகளுடைய திருமணத்தில் அவரு டன்முத்தியடைந்தவர் அநேகம்பேர் பலவளப்பங்களையுள்ள நம்பியா ரூரனென்னும் சுந்தரமூர்த்திசுவாமிகளுடன் சேரமான்பெருமாள்நாய னார் குதிரையேறிக்கொண்டு கயிலைக்குச்செல்ல அப்போது அவருடன் சென்றுமுத்தியடைநதவர்கள் அளவிறந்தோர்கள்-என்க.

*சிவனடியாருடன்பகையாய்முத்தியடைந்தவர்கள்-சேய்*
*ஞலூர்ச்சண்டேசர்பிதாவெச்சதத்தன், கவர்புகழ்சேர்கோ*
*ட்புலியாருரைத்த திருவிரையாக்-கலிபிழைத்தகிளைபகை*

த்து நரகினைச்சென்றடைந்தோர், தவரானமூர்த்தியாரிறை
வனுக்குச்சாத்துஞ்சந்தனக்காப்பினை விலக்கியமண்சமய
ச்சார்வாய்ப், புவிபுரந்தகருநடமன்னவன்முதலநேகர் பு
ராணகதையினைப்பிரித்துப்புகலவெளிதலவே. (௩௮)

இ-ள். திருச்சேய்ஞலூரில்அவதரித்தசண்டேசர்பிதாவாகியஎச்சதத்தனென்பவனும் பரந்தபுகழ்சேர்ந்த கோட்புலிநாயனார் சொல்லிய திருவாணையைக்கடந்த சுற்றத்தாரும் சிவனடியார்களைப்பகைத்து முத்தியடைந்தவர்கள் தவசிரேட்டராகிய மூர்த்திநாயனார்பரமசிவத்திற்குச்சாத்துகின்ற சந்தனக்குறடுகிடையாதபடி விலக்கிச்சமண் சமயச்சார்பினனாகி யுலகத்தையாண்ட கருநடதேசத்தரசன் முதலிய அநேகர்சிவனடியார்களைப் பகைத்து நரகத்தையடைந்தவர்கள் இவ்வாறு புராணசரித்திரத்தை அளவிட்டுச் சொல்லுதல் அரிதாம்-என்க.

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்தநாளி-லடித்
தொண்டுசெய்தொண்டர் சிலரவர்க்குமுன்னே, பேரூர்
மெய்த்தொண்டுசெய்தபேர் சிலபேரவர்க்குப்-பிறகுதிரு
த்தொண்டுசெயும்பேர்சிலபேராகச்,சீருருந்திருத்தொண
டர்புராணத்திற்சேர்த்துச்சேர்வையர்கோன்-சேவைசெயு
ந்தொண்டரள விறந்தோர்,காளருமணிகண்டர்க்கவரவர்
கள்செய்த - கைத்தொண்டினிலைகளைகண்டுரைக்கவெளி
தலவே. (௩௯)

இ-ள். சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத்தொகையோதியஅக்காலத்தில்திருவடித்தொண்டுசெய்துகொண்டிருந்த அடியார்கள் சிலர் சுந்தரமூர்த்திசுவாமிகள் காலத்திற்குமுன் பெருமைமிக்க உண்மையாகிய திருத்தொண்டுசெய்தவர்கள் சிலர்அவர்க்குப்பிற்காலத்தில்திருத்தொண்டு செய்கினறவர்கள்சிலர் இவ்வாறாகச் சிறப்புப்பொருந்திய திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் சுவாமிகள் சேர்வைசெய்த அடியார்கள் அநேகம் பேர்களாம் காளகண்டராகிய சிவபெருமானுக்கு அந்தந்த அடியார்கள்செய்த கைத்தொண்டினது நிலைமையை அளவுகண்டுசொல்ல எளிதல்ல-என்க.

ஓருலகோவொருதிசையோவொருபதியோதம்பி-லொ
ருமரபோ வொருபெயரோ வொருகாலந்தானே, பேரு
லகி லொருமை நெறிதருங்கதையோபன்மைப்-பெருங்க
தையோபேரொன்றோவல்லவேயிதனை, யேருலகெலாமு
ணர்ந்தோதற்கரியவன்னென்-றிறைவன்முதலடியெடுத்து

க்கொடுத்தருளக்கொண்டு, பாருலகினுமகனின் றெடுத்துக் கைநீட்டப்-பாடிமுடித்தனர் தொண்டர் சீர்பரவவல்லார். (சய)

இ-ள். (அத்திருத்தொண்டர்க்குரியவை) ஒருஉலகமோ,ஒருதிசையோ, ஒருபதியோ, தங்களுள் ஒருமரபோ ஒருவரோ, ஒருகாலமோ பெரியவுலகில் ஒருமைநெறியினைக் கொடுக்கத்தக்க சரித்திரமோ பலவாகிய பெருங்கதையோ ஒருபெயரோ நாமறியோம் ஆனால் இதை மேன்மையாகிய உலகெலாமுணர்ந்தோதற்கரியவனென்று பரமசிவம் முதலடியெடுத்துக் கொடுத்தருள அதைப்பெற்றுக்கொண்டு இவ்வுலகின்கண் சரஸ்வதியானவள சொற்களையெடுத்துக்கொடுக்க அடியார்களது சிறப்பைத்துதிசெய்யவல்லவராகிய சேக்கிழார்சுவாமிகள் புராணமாகப்பாடி முடித்தனர்-என்க.

கருங்கடலைக்கைநீத்துக்கொளவெளிதுமுந்நீர்க்-கடற்கரையினுெய்மணலையெண்ணியளவிடலாம், பெருங்கடன்மேல்வருந்திரையையொன் றிரண்டென்றெண்ணிப் பிரித்தெழுதிக்கடையிலக்கம் பிரித்துவிடலாகும், தருங்கடலின்மீனையளவிடலாகும்வானத்-தாரகையையளவிடலாஞ்சங்கரன்றடமது, சிரங்கொடிருத்தொண்டர்புராணத்தையளவிடநஞ்-சேக்கிழார்க்கெளிதலது தேவர்க்குமரிதே.சக

இ-ள், கருங்கடலைக்கையினால் நீந்திக்கரையேறுதல் எளிதாம்சமுத்திரக்கரையிற் பொருந்திய நுண்ணியமணலையும் இவ்வளவென்றளவிட்டுச்சொல்லலாம் பெரியசமுத்திரத்தில் மறித்துமறித்து வருகின்ற அலைகளையும் ஒன்றிரண்டென்றெண்ணிப்பிரித்தெழுதிமொத்தத்தொகைகூட்டிச்சொல்லலாம்வுளப்பங்களைக்கொடுக்கும் கடல்மீனையும் இவ்வளவென்றளவிடலாம் ஆகாயத்தின்கண் நக்ஷத்திரங்களையும் அளவிடலாகும் பரமசிவத்தின் திருவடிகளைத் தமதுசிரசில்தரித்ததிருத்தொண்டர்கள் புராணத்தை அளவிட்டுச் சொல்ல நம்முடைய சேக்கிழார் சுவாமிகளுக்குளெளிதன்றி,தேவர்களுக்கும்அருமையானதாகும்-என்க.

அறுபதுபேர்தனித்திருப்பேர் திருக்கூட்டமொன்ப-தாகவறுபத்தொன்பதானடியார்கதையை,மறுவிறிருநாவலூர்ச்சிவமறையோர்குலத்து - வருசடையனார்மனைவியிசைஞானிவயிற்றி-லுறுதிபெறவவதரித்தவாரூராமுன்னு-ருசைசெய்த திருத்தொண்டத் தொகைப்பகுக்கவே,

நறைமலிபூம் பொழில்புடைசூழ்திருநாரையூரி-னம் பியா
ண்டார்திருவந்தாதிகடைப்பிடித்து. (சஉ)

இ-ள். சிறப்புள்ள தனிப்பேர்களாகிய அறுபதுபேர்களும் திருக்கூட்டமொன்பதும் ஆக அறுபத்தொன்பதென்னும் அரனடியார்களது சரித்திரத்தைக்குற்றமில்லாத திருநாவலூர்ச்சைவவேதியகுலத்தில்வந்தசடையநாயனார் மனைவியாராகிய இசைஞானியார்வயிற்றில் இவ்வுலகினைகண் உயிர்களுறுதிபெறும்படித்திருவவதாரஞ்செய்தருளியசுந்தரமூர்த்திசுவாமிகள்முற்காலத்திற்சொல்லிய திருத்தொண்டத்தொகையாகிய பதிகத்தின் முறைப்படிவாசனைபொருந்திய புட்பச்சோலை சூழ்ந்த திருநாரையூர் நம்பியாண்டார்நம்பிசெய்தருளிய திருவந்தாதியை ஆதாரமாகவைத்துக்கொண்டு-என்க.

காண்டமிரண்டாவகுத்துக் கதைப்பரப்பைத்தொகுத்
துக்-கருதரியசருக்கங்கள்பதின்மூன்றுநிலையிட், டெண்டு
ரைத்தபுராணத்திற்றிருவிருத்தநாலா-யிரத்திருநூற்றைம்
பத்துமூன்றாகவமைத்துச்,சேண்டகையதிருத்தொண்டர்
புராணமெனப்புராணத்-திருமுறைக்குத் திருநாமஞ்சீர்
மைபெறவமைத்திட்., டாண்டகைமைபெற வெழுதிமைக்
காப்புச்சாத்தி, யழகுபெறக்கவளிகையுமமைத்ததில்வை
த்ததன்பின். (சங)

இ-ள் செய்யத்தொடங்கியபுராணத்தைஇரண்டுகாண்டங்களாகப்பிரித்துச்சரித்திரவிரிவைத்தொகுப்பாகச்செய்துநினைத்தற்கரியசருக்கங்கள்பதின்மூன்றாகவைத்து இவ்வாறியற்றினபுராணத்தைநாலாயிரத்திருநூற்றைம்பத்துமூன்றுதிருவிருத்தங்களாலநிறைத்துஇப்புராணத்திருமுறைக்குப் பெருஞ்சிறப்பினைபெறறதிருத்தொண்டர்புராணமெனமேன்மைபொருநதத திருப்பெயரிட்டுநன்றாக ஏட்டிலெழுதிமைக்காபபுச்சாத்தி அழகுபொருநதப் புத்தகக்கவளிகை யொன்றுசெய்து அதில வைத்த பின்னர்-என்க.

வேறு.

சேனைகாவலர்"புராணகாதைதொகை செயநினைந்தெ
மையகன்றபின், யாவர்தாமருங்கிருந்தபேர்கள்கதைசென்
றதெவ்வளவிருந்ததெங், காவதென்னிவைகளறியவேண்
டுமதறிந்து வாருமெனவளவர்கோ-னேவிஞனுரியதூதர்
தூதரறியாமலொற்றனையுமேவினன். (சச)

இ-ள். சேக்கிழார்சுவாமிகள் புராணகாவியத்தொகையினைச் செய்ய நினைத்துளம்மை விட்டுநீங்கினபின்பு அவர் அருகில்இருந்தவர்கள் யாவர் இதுவரைக்கும்புராணம்எவ்வளவாயிற்றுஎங்கேயிருந்துபுராணத்தையியற்றுகின்றனர் இனியாகவேண்டியதுயாது அவைகளைநான்தெரிந்துகொள்ளவேண்டுமாதலால் தெரிந்துவருகவென்று அநபாயசோழச்சக்கிரவர்த்தி உரிமையான தூதர்களை யேவினர் அத்தூதுவர்கள் அறியாமல் ஒற்றர்களையும் அனுப்பினர்-என்க.

வென்றிவேல்வளவனள வறிந்துவரவிட்டகாளையர்புரா
ணநூ, லொன்றுபாதிகதைசென்றதென்று சிலரோடினோர்
சிலருவந்துசென், றின்றுநாளைமுடியும் புராணமினியெ
ன்றுரைத்திடவிறைஞ்சினன'- சென்றுநற்கதைமுடிந்த
தென்றுசிலர்செம்பியற்குறுதிசெப்பினார்.  (சரு)

இ-ள். வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய அநபாய சோழச் சக்கிரவர்த்தியானவர் புராணம் எவ்வளவாயிற்றென்று அறிந்துவரும்படி யேவியதூதுவருள் புராணம் பாதிசரித்திரமாயிற்றென்றுசிலர் விரைந்துவந்து சொல்லினர் சிலர்மிகுந்தசந்தோஷத்துடன் சென்று புராணம் இனி இன்றைக்குள் நாளைக்குள் முடிவுபெறு மென்றுசொல்லக்கேட்டு அத்திசையைநோக்கி வணங்கினர் அதனபின்சிலர் சென்று நன்மைபொருந்திய அப்புராணம் நிறைவேறியதென்றுசோழ மகாராஜாவுக்கு உறுதியாகச்சொல்லினர்-என்க

வந்துசொன்னவர்களனைவருக்கு நவமணிகளுந்துகிலு
மம்பொனுஞ், சிந்தியள்ளியுமுவந்துவீசியுயர் செம்பொ
னம்பலமருங்கில்வா, ழந்திவண்ணர்நடமும்பணிந்துமு
தலடியெடுத்தவர்கொடுத்திடப், புந்திசெய்துமகிழ் சே
வைகாவலர் புராணமுந்தொழுவனெனு.  (சசா)

இ-ள். இவ்வாறு வந்துசொல்லியதூதுவர்களுக்கெல்லாம் நவரத்தினங்களையும் நல்லவஸ்திரங்களையுஞ் சொர்ணங்களையும் மிகுந்தசந்தோஷத்துடன் எடுத்தெடுத்துக்கொடுத்து மாற்றுயர்வாகியபொன்மயமான சிற்சபையில் வீற்றிருக்கின்ற செவ்வானநிறத்தையொத்ததிருமேனியையுடையநடேசமூர்த்தியின் நடனத்தையும்வணங்கி அநநடேசமூர்த்தி முதலடியெடுத்துக்கொடுத்தருள அதை முதலாகவைத்துக்கொண்டு பாடி மகிழ்ச்சியுறற சேக்கிழார்சுவாமிகளுடைய புராணத்தையும் நான்றொழுவேனென்று யத்தனித்து- என்க.

கோ. மா. ப. ஜ. ஸ்ரீபாவுப் 20 ௳ 1873 ௵ மேயீ



சிதம்பரம் ஆயிரக்கால்மண்டபத்தில் பெரியபுராணம்அரங்கேற்றியது.

வீதிவீதிகடோறுந் தொநும்பயணமென்று வென்றிமு
ணிமுரசறைந், தோதிவேதியர்களெண்ணியிட்டவுயர்நா
ளுமோரையு முகூர்த்தமும், போதநாடிவரைபுரைகடக்க
ளிறுபுரவிதேர்களுவியாடரச், சாதுரங்கமுடனே செலப்
பிளிறு தந்திமேல்கொடுநடந்தனன். (சஎ)

இ-ள். ஸ்ரீசிதம்பரத்திற்குப் பயணம் புறப்படவேண்டுமென்று வீதிவீதிகள்தோறும் வெற்றிபொருந்திய பெரியபேரிகைமுழக்கி நல்லகணிதசாஸ்திரிகள் தெரிந்துகணித்துச் சொல்லியசுபதினமும் லக்நமும்முகூர்த்தமும் நன்றாய்த்தெரிந்துகொண்டு மலையையொத்தமதயானை குதிரை தேர் காலாள் என்றுசொல்லும் சதுரங்கசேனைகளுந் தம்முடன்சூழவரும்படி மகாராஜா முழங்குகின்ற பட்டத்துயானைமீதேறிச்சென்றனர் என்க.

தேர்முழக்கொலிமழைக்கடக்கரட சிந்துரக்களிறுபிளி
றுசீ, ரார்முழக்கொலிபரிச்செருக்கொலிபதாதிவந்தெதிர
டர்ந்தெழும், போர்முழக்கொலிசழக்கிலாதுயர் படைக்க
லன் புணருமோசையேழ், கார்முழக்கொலியி னெட்டிர
ட்டிநிறைகடன் முழக்கெனமுழக்கெழ. (சஅ)

இ-ள். இரதத்தின் ஒலியும் மேகத்தைப்போல மதம்பொழிகின்ற சிந்துரமெழுதிய யானைகள்கூச்சலிடுகின்ற பெரியஓசையும் குதிரைகள் அறுமானிக்கு மொலியும் பதாதிகள் ஒருவர்க்கொருவர் எதிரில்வந்துநெருங்கிக் கெர்ச்சிக்காநின்ற பேரொலியும் குற்றமில்லாத கூரிய ஆயுதங்கள ஒன்றுடனொன்று தாக்குதலாலுண்டாகின்ற ஓசையும் சத்தமேகங்களின் ஒலியைப்பார்க்கிலும் பதினாறுபங்கு அதிகமாக நிறைந்தசமுத்திர முழக்கம்போல முழங்க- என்க.

வளவர்கோன்வரவறிந்துதில்லைமறையோரும்வண்மை
மடபதிகளும், பிளவுகொண்டமதிநுதன்மடந்தையருமற்
றுமுள்ளபெரியோர்களுங், களவிலாதமொழிகொடு புரா
ணகதைசெய்தகங்கைகுலதிலகருந், தளவமாலையபயனை
யெதிர்ந்தினியசாரவாசிபலசாறறினார். (சகூ)

இ-ள். (அவ்வோசையினால்) சோழமகாராஜாவரவினைத்தெரிந்து தில்லைவாழந்தணர்களும் வளப்பமிகுந்த மடாதிபதிகளும் வளைவுபொருந்திய சந்திரனையொத்த நெற்றியுள்ள மாதர்களும் இன்னுமுள்ளபெரியோர்களும்-வெளிப்பட்டஅசரீரிவாக்கைக்கொண்டுதிருத்தொண்டர்

புராணகதையையியற்றிய சேக்கிழார்சுவாமிகளும் முல்லைமலர் மாலையையுடைய அநபாய சோழச்சக்கிரவர்த்தியை யெதிர்கொண்டு இனியபயனைத்தராநின்ற ஆசிமொழிகள்பலவாகச் சொன்னார்கள்-என்க.

முண்டமானதிரு முடியுமிட்டதிருமுண்டமும்கவசமு
ந்துணைக், குண்டலங்களுமிரண்டுகாதினும் வடிந்தலைந்த
குழையுந்திருக, கண்டமாலைகரமாலையுஞ்சிரசுமாலையுங்க
வின்விளங்கவே, தொண்டர்சீர் பரவுவானணைந்த சுபசரி
தைசோழனெதிர்கண்டனன். (ருய)

இ-ள். முண்டிதமாகிய திருமுடியும் திரிபுண்டரமாகத் தரித்தவிபூதியும் உருத்திராட்சங்களும் இணையாகியகுண்டலமும் இரண்டுகாதினிடத்தும தொங்கியசைந்துகொண் டிராநின்ற கண்டிகையும் கழுத்திலணியும் உருத்திராக்ஷகண்டிகையும் கரத்தின்கண்ஜெபமாலையும் சிரத்தின் மாலையும் அழகுபொருந்த திருத்தொண்டர்புராணத்தை நிறைவேற்றிய சேக்கிழார்சுவாமிகள் வருதருளிய சுபசரித்திரத்தைச் சோழமகாராஜாகண்ணினால்எதிராகக் கண்டனர்-என்க.

கண்டபோதுளமகிழ்ந்து தன்னையறியாது கைகடலைமீ
துறக், கொண்டவேட மரனடியர்வேடமிது குறைவிலாத
தவவேடமென், றண்டவாணர்திருவருளை யுன்னியவரடி
மைகொண்டபெருமையைநினைந், தெண்டயங்கரசரேறு
சேவையர் குலாதிபாதுகையிறைஞ்சினான். (ருக)

இ-ள். கண்டவுடன் உள்ளமகிழ்ந்து தன்னையறியாமலே இரண்டு கைகளும் அஞ்சலியாகச் சிரசின்மீதுபொருந்த இவர்கொண்டிருக்கும் வேடம்சிவனடியார் வேடமே மேலும் இதுகுறைவில்லாததவவேடமேஎன்று தேவதேவனாகிய பரமசிவத்தின் கிருபையைநினைந்துஅவவாஅடிமையாகக்கொண்ட பெருமையைச்சிந்தித்து யாவரொண்ணத்தும் வீற்றிருக்கும் அரசராகியயானைகளுக்கு ஆண்சிங்கத்தையொத்த அநபாய சோழச்சக்கிரவர்த்தியானவர் சேக்கிழார்சுவாமிகளது திருவடிப்பாதுகையில் வணங்கினர்-என்க.

இறைஞ்சியம்பலவர் பாததாமரையிறைஞ்ச வெண்ணி
வரன்முறைமையா, லறஞ்சிறந்தமுனிசேவைகாவலருமா
றைஞ்ஞூறுமறையோர்களுந், துறஞ்சிறந்தமடபதிகளுந்
தொடரவந்துமன்னனரிபிரமர்பான், மறைந்துநின்றபொ
ருள்வெளிப்படக்கனகமன்றினின்றபடிகண்டனன். (ருஉ)

இ-ள். வணங்கிக்கொண்டு நடேசமூர்த்தி திருவடித்தாமரைகளை வணங்கநினைந்து வரன்முறையாக சிவதருமத்தில் மிகுந்த முனிசிரேஷ்டராகிய சேக்கிழார்சுவாமிகளுந் தில்லைவாழந்தணர் மூவாயிரவர்களுந் துறவறத்திற்சிறந்த மடாதிபதிகளும் தம்மைத் தொடர்ந்துவரச்சோழராஜாபிரமவிஷ்ணுக்களிடத்தில மறைந்திருக்கின்ற பரம்பொருளானது வெளியாகச சிற்சபையில் கிர்த்தனஞ்செய்து நின்றருளுந் திருக்கோலத்தைத் தெரிசித்தனர்-என்க.

கண்டகண்ணரு விதாரைகொள்ள விருகைகளஞ் சலி
கொளக்கசிந், தெண்டரும்புளகரோமகூபமெழவின்பவா
ரிகரைபுரளவாய், விண்டதூமொழிகள்குழறவன்பினொடு
விம்மிவிம்மியருண்மேலிடத், தெண்டனுகமுன்விழுந்தெ
ழுந்துநனிசெம்பியன்பரவவெம்பிரான். (௫௩)

இ-ள். தெரிசித்த கண்ணனது அருவித்தாரை பொழியவும் இருகைகளும் அஞ்சலிகொள்ளவும் மனமுருகி எண்ணத்தக்கபுளகாங்கிதமாகமயிர் சிலிர்க்கவும் ஆனந்தக்கடலானது கரைபுரளவும் வாக்கினிடத்திலுண்டாகின்றசொற்கள்குழறவும் அன்புடனே யதிக விம்மிதமடைந்துதிருவருள்மேலீடாய் அஷ்டாங்கபஞ்சாங்கமாக நமஸ்கரித்து எழுந்திருந்து மிகுதியாகச் சோழராஜா தோத்திரஞ் செய்ய எமது பிரானாகிய நடேசர்-என்க.

சேக்கிழானமதுதொண்டர்சீர்பரவநாமகிழ்ந்துலகமெ
ன்றுநம், வாக்கினாலடியெடுத் துரைத்திடவ ரைந்துநூல்
செய்துமுடித்தனன், காக்கும்வேல் வளவநீயிதைக்கடிது
கேளெனக் கனகவெளியிலே, யூக்கமானதிருவாக்கெழுந்
ததுதிருச்சிலம்பொலியுமுடனெழ. (௫௪)

இ-ள். உலகுயிர்களைக்காக்கும்வேலாயுதத்தையுடையசோழராஜனே சேக்கிழான் நமதுஅடியார்கள சிறப்பைபத்துதிசெய்ய நாம்மகிழ்வுற்று நமதுவாக்கினால் உலகமென்று முதலடியெடுத்துக் கொடுக்கக்கொண்டு புராணஞ்செய்து நிறைவேற்றினன அதைநீயிரைவிற்கேட்கவென்று கனகசபையின்கண் யாவருமகிழும்படியான உறுதியுள்ள ஒருஅசரீரிவாக்கு உண்டாயிற்று அவ்வோசையுடன் நடனச்சிலம்பினோசையுங்கூட வுண்டாக-என்க.

மன்றுளாடிதிருவாய்மலர்ந்த மொழியுஞ்சிலம்பொலியு
மன்றிலே, நின்றமானிடர்செவிப்புலன்புக நிறைந்ததன்றி

யநிலத்தின்மே, லொன்றிநின்றுயர்சராசரங்களுடையக்கசி
ந்துருகியோலிடக், குன்றிலங்குதிரடோண் ரேந்திரபதி
குதுகுதுத்துளமகிழ்ந்தனன். (ருரு)

இ-ள். நடேசமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய அசரீரிவாக்கும் சிலம்பி ஒதமும் சிற்சபையின்கண்ணின்றிருந்த அடியார்களுடையகாதுகளில்கேட்கநிறைந்ததல்லாமலும் இவ்வுலகத்தின்கண்பொருந்திநின்ற உயர்ந்த சராசரங்களெல்லாம் மனம்நெக்குவிட்டுருகியாரவாரிக்க மலைபோற்றிரண்ட புயங்களையுடையசோழமகாராஜாவும் குதூகலங்கொண்டுள்ளம் மகிழ்ச்சியடைந்தனர்-என்க.

தொண்டர்தொண்டுசெய் புராணகாதைமதிசூடுநாதர்தி
ருவருளினால், விண்டநீதி புனைசேக்கிழார் முனிவிரித்து
ரைத்தகதைகேட்பதற், கண்டவாணரடியாரெலாங்கடுகவ
ருகவென்றுதிசைதிசைதொறு, மெண்டயங்கரசனேடெ.
டுத்தெழுதியாளுமோலைகளுமேவினன். (ருசு)

இ-ள். மநுச்சக்கிரவர்த்தியினால் சொல்லியநீதியைத் தெரிந்த சேக்கிழார் சுவாமிகள்நடேசமூர்த்தியின் திருவருளினால் விரிவாகச் சொல்லிய திருத்தொண்டர்புராணத்தைக் கேட்பதற்குச் சிவனடியார்கள்யாவரும் விரைவாய்வரக்கடவர்கள் என்று வானுலகத்திலுந் தன்கீர்த்தியைச்செலுத்திய சோழமகாராஜா திக்குகள்தோறும் திருமுகமெழுதி அத்துடன் தூதுவர்களையும் அனுப்பினார்-என்க.

வேறு.

கவசமணிந்தசனங்களுமிங்கிதமுங்கம்பித்
தவசமுறுஞ்சிவசிந்தையுமன்பகலாமேன்மைத்
தவசரிதத்தொழிலுஞ்சிவசாதனமுஞ்சாரச்
சிவசமயத்தவர்யாவரும்வந்துதிரண்டார்கள். (ருஎ)

இ-ள். விபூதி யுருத்திராட்சமாகிய கவசத்தை யணிந்தஅடியார்களும் இங்கிதமும் யாக்கைவிம்மிதங்கொண்டு பரவசமடையும்படியானசிவசிந்தையினையும் அனபுநீங்காத மேன்மையினையும் உடையசிவனடிமைத்தொண்டும் காஷாயமுஞ்சடைமுடியும் பொருந்தும்படி சிவநேசராகிய அடியார்கள்யாவரும் வந்து கூடினர்-என்க.

வேதியர்வேதமுழக்கொலிவேதத்தைத்தமிழா
லோதியமூவர்திருப்பதிகத்தொலியோவாமற்

பூதியணிந்தரகரவெனவன்பர்புகழ்ந்தோதுங்
காதியல்பேரொலிகாரொலிபோலொலிகைத்தேற.     (ருஅ)

இ-ள். பிராமணர்களுடைய வேதவொலியும் அந்தவேதத்தைத் தமிழாற்கூறிய மூவர்களுடைய தேவாரத்திரொலியும் விபூதியையணிந்த அடியார்கள் அரகரவென்று நீங்காமல் துதிசெய்து புகழும்படியான செவிக்குப்பொருந்திய பெரியவொலியும் மேகத்திரொலியேபோலொலித்து அதையும் அடக்கி மேலிட-என்க.

பூசிப்பவர்சிலர்பூசித்தன்பொடுபுனிதன்று
ணேசிப்பவர்சிலர்பிறவாவரமருணிமலாவென்
றியாசிப்பவர்சிலர்திருமுறையெழுதிக்களிகூர
வாசிப்பவர்சிலராகவிருந்துமகிழ்ந்தார்கள்.     (ருகூ)

இ-ள். சிவபூசைசெய்கின்றவர்கள் சிலபேரும் அவ்வாறுபூசைசெய்துநடேசர்திருவடிகளைத்தியானஞ்செய்கின்றவர்கள்சிலபேரும்நடேசமூர்த்தியே அடியோம் இறந்து பிறவாவரம் அருளென்று ஏற்கின்றவர்கள்சிலபேரும் புராணத்திருமுறையையெழுதி விருப்பமுற வாசிக்கின்றவர்கள் சிலருமாக இருந்து மகிழ்ச்சியடைந்தார்கள்-என்க.

தெள்ளுதிரைக்கடன்மீதுமிதந்ததிருத்தோணி
வள்ளலையன்புசெயப்பாமடங்கடொறும்பாலர்
மெள்ளவிருந்துமிழற்றுபுராணவிருத்தத்தைக்
கிள்ளைகள்பாடியுரைப்பனகேட்பனமெய்ப்பூவை.     (சூய)

இ-ள். தெள்ளிய அலையோடுங்கூடிய சமுத்திரத்தில் ஊழிகாலந்தோறு மிதந்த தோணிபுரத்தில் திருவவதாரஞ்செய்த சம்பந்தசுவாமிகளுக்கு அன்பினைச்செய்கின்ற அடியவர்கள்மடங்கடோறும் சிறுபிள்ளைகள் அமைவாகவாசிக்கின்ற புராணவிருத்தத்தைக் கிளிப்பிள்ளைகளுஞ்சற்றுக்கொண்டு பாடிப்பொருள்சொல்வன. அதைநாகணவாய்ப்புட்கள் கேட்பன-என்க. உம்மைதொக்கிநின்றது.

மற்றதுகண்டுகளித்தநலத்தமனத்தோடு
சுற்றியமந்திரிமாரொடுதந்திரிமார்சூழத்
தெற்றெனவந்துதிரண்டுமுரண்டருசீர்நாடு
பெற்றதுசெல்வமெனத்தனியோகைபெருத்தார்கள்.     (சூக)

இ-ள். அதைக்கண்டுகளிப்பையடைந்தநன்மையுள்ளவுள்ளத்தோடுஞ்சேர்ந்திருக்கிற மந்திரிகளும் சேனாதிபதிகளுஞ்சூழ விரைவில்வந்

துகூட்டங்கொண்டு காவலையுடைய நிலையுள்ளஇவ்வுலகமானது மகதை சுவரியத்தைப்பெற்றதென்று பேரானந்தப்பெருக்கமுற்றனர்- என்க.

பாடினர்தும்புருநாரதர்நீடிசைபாடாநின்
றாடினர்வானிலரம்பையரஞ்சலிசெஞ்சாமற்
சூடினர்மண்ணின்மடந்தையரெந்தை துணைப்பாதந்
தேடினர்மாலயனன்பர்நடந்தரிசித்தார்கள். (சுஉ)

இ-ள். தும்புருநாரதர் கானம் பாடினார்கள், விண்ணில் அரம்பையர் இசைபாடிக்கொண்டு ஆடினார்கள், பூவுலகமாதர்கள் குறைபாடின் றிக்கரங்களைச்சிரசின்மேல் குவித்துத்தொழுதார்கள், எமதுபிரானாகிய நடேசமூர்த்தியின் இரண்டுதிருவடிகளையும் மாலுமயனுந்தேடினார்கள். அடியார்கள்நடனதெரிசனஞ்செய்தார்கள்- என்க.

சங்கொடுபேரிகறங்கிசைவீணைதனித்தாளம்
வங்கியகாளமிடக்கைகடக்கைமணிக்காளம்
பொங்கியபம்பைவலம்புரிகண்டைமுதற்பொற்பார்
மங்கலதூரியமெங்குமுழங்கிவனப்பெய்த (சுகூ)

இ-ள். சங்குகள் பேரிகைகள் சப்திக்கா நின்றவீணைகள் ஒப்பற்ற தாளங்கள் வேய்ங்குழல்கள்சொம்புகள் எக்காளங்கள் அழகிய தக்கைசகள் திருச்சின்னங்கள் ஒலிக்காநின்ற பம்பைகள் வலம்புரிச்சங்கங்கள் கைம்மணிகள் இவைமுதலாகிய அழகுநிறைந்த மங்கலவாத்தியங்கள் எங்குஞ்சத்தித்துச் சிறப்பெய்தவும்- என்க.

வேதியர்வேள்விநெடும்புகையாலயமெங்கெங்குங்
காதியகுங்குலியப்புகைநீடுகருப்பாலைச்
சோதிநெடும்புகைதோரணவீதிதொறுந்தோறு
மாதர்புகைக்குமகிற்புகையெங்கும்வனப்பெய்த. (சுச)

இ-ள். பிராமணர்புரிகின்ற யாகத்திலுண்டாகிற மிகுந்த புகையுந்தேவாலயங்கள்தோறும் அடியவர்கள் இடுங்குங்கிலியப்புகையும் நீண்டகருப்பஞ்சாற்றைக் காய்ச்சுதலா லுண்டாகின்ற ஒளிமிகுந்தபுகையுந்தோரணங்கள் கட்டிய வீதிகள்தோறும்மாதர்கள் ஊட்டுகின்றஅகிற்புகையும் - எங்கும்பரிமளிக்கவும்- என்க.

ஆடகநாடகசாலைகண்முத்தணியத்தாணி
மேடையரங்குகளங்கமிலாதவெளிக்கூட

மாடமதிட்கனமாளிகைசூளிகையெங்கெங்குந்
தோடவிழ்மாலைகள்பொன்னரிமாலைகள்சூழ்வித்தார். (௬௫)

இ-ள். பொன்னாலாகிய நாடகசாலைகளிலும் முத்துக்களால் அலங்கரித்திருக்கும் பெரியமண்டபங்களிலும் மேடைகளிலும் சபைகளிலும் குற்றமில்லாத நிலாமுற்றங்களிலும் வீடுகளிலும் மதில்களையுடைய பெரிய மாளிகைகளிலும் அவற்றின்சிகரங்களிலும்மற்ற எல்லாவிடங்களிலும் இதழ்களுடன் மலர்ந்தபுஷ்பமாலைகளையும் பொன்னரிமாலைகளையும் அலங்காரஞ்செய்தார்கள்-என்க.

பழுதகலத்திருவலகுமிருப்பொடுபணிமாறிக்
குழைவுபெறத்திகழ்கோமயநீர்குளிரச்செய்து
தழைபொதிதோரணமுங்கொடியுந்துகிலுஞ்சார்வித்
தழகுபெறத்திருவீதிபுதுக்கியதன்பின்பு. (௬௬)

இ-ள். குற்றநீங்கவிருப்பத்துடனே திருவலகிட்டுக்குழம்பாகச் சாணத்தையுங்கோசலத்தையுங்கரைத்துத்தெளித்துத்தழைநெருங்கிய புஷ்பத்தோரணங்களுங் கொடிகளும் மேல்விதானங்களும் அலங்கரித்து அழகுபொருந்த வீதிகளை அலங்காரஞ்செய்து அதன்பின்பு-என்க.

வேறு.

திருநெறித்தமிழ்வல்லபேர்கள்சிவாகமங்கள்படித்தபேர்
கருநெறிப்பகைஞானநூல்பலகற்றபேர்மறைகற்றபேர்
குருநெறிக்குரியோரிலக்கணலக்கியங்கள்குறித்தபேர்
பெருநெறிப்பலகாவியங்கதைபேசவல்லவரனைவரும். (௬௭)

இ-ள். திருநெறித்தமிழில் வல்லவர்களுஞ் சிவாகமங்களைப்படித்தவர்களும் செனனம்வருவழிக்குப்பகையாகிய பலஞானசாஸ்திரங்களைக்கற்றபேர்களும் வேதபண்டிதர்களும் போதகாசாரியர்களும் இலக்கண இலக்கியங்களைக்கற்றபேர்களும் நன்னெறியையுடையபலபுராணங்களைப் பேசவல்லவர்களும் ஆகியஇவர்களெல்லாரும்-என்க.

வேறு.

வள்ளலார்திருநடனஞ்செய் மன்றின்முன்றின் மறையவர்கோமயசலத்தன்மெழுகித்தாபித், தெள்ளரும்வெண்சுதையொழுக்கியறுகாற்பீட மிட்டதன்மேற்பசும்பட்டுவிரித்துநீதே, வெள்ளைமடித்திட்டுமதுமலருந்தூவி விரைநறுந்தூபங்கொடுத்தாதனங்கற்பித்துத், தெள்ளுதமிழ்ச்

சேக்கிழார்புராணஞ்செய்த திருமுறையையதன்மேல்வை
த்திறைஞ்சிப்போற்றி. (கூஅ)

இ-ள். நடேசமூர்த்தி நடனஞ்செய்கின்ற சிற்சபைக்குமுன்னே தி ல்லையந்தணர்கள் கோமயசலத்தால் மெழுக்கிட்டு விநோதமானகோல மிட்டு அறுகாற்பீடமமைத்து அதன்மேல் பசும்பட்டுவிரித்து அதன்மீ துவெள்ளைவஸ்திரம்மடித்துத்தரித்துத் தேனிறைந்த புஷ்பங்களையும் பரப்பி மணம்பொருந்திய நல்ல தூபதீபாராதனைகள் செய்து இவ்வா று ஆசனமேற்படுத்தி தெள்ளியதமிழில்வல்ல சேக்கிழார்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய புராணத்திருமுறையை அதன்மேல்வைத்து வணங்கித்துதித்து- என்க.

வாழிதிருத்தொண்டர்புராணத்தைநீரேவாசித்துப்பொ
ருளருளிச்செய்வீரென்று, சோழர்பெருமான்முதலாமடி
யரெல்லாஞ் சொலக்கேட்டுக்குன்றைமுனிமனமுளாடுங்,
தாழ்சடையானடியெடுத்துத்தரத்தாஞ்செய்த சைவகதை
யினைவிளங்கவிரித்துச்சொல்லச், சூழவிருந்தம்பலவரடி
யாரெல்லாஞ் சுருதிமொழியிதுவெனக்கைதொழுதுகே
ட்டார். (கூகூ)

இ-ள். திருத்தொண்டர் புராணமாகிய இதைத் தேவரீரேவாசித் துப் பொருளருளிச்செய்வீரென்று சோழராசன் முதலாகிய அடிய வர்களெல்லாம்பிரார்த்திக்க அதனைஏற்றுச் சேக்கிழார்சுவாமிகள் சிற்ச பையினிடத்து நிர்த்தனஞ்செய்கின்ற தாழ்ந்தசடையையுடைய நடே சமூர்த்தி முதலடியெடுத்துக் கொடுக்கத்தாம் செய்ததிருத்தொண்டர் சரித்திரத்தை யாவருக்குந் தெரியும்படி விரிவாகப் பொருளருளிச் செய்ய நடேசமூர்த்தியின் அடியார்களெல்லாரும் இதுவே வேதவா க்கியமென்று அஞ்சலியாகக்கைகூப்பிச்சிரவணஞ்செய்தார்கள். என்க

தாளுடையதிருச்சிலம்புபுலம்பநடம்புரியுந் தன்மையர
னுக்கிசைந்தபேர்வழியினாளும், ஆளுடையபிள்ளையாரவ
தரித்தநாளு மவரமுது திருஞானமமுதுசெய்தநாளுஞ் ,
சூளுடையாதிரைநாளாஞ்சித்திரையாதிரைநாட்-டொடங்
கியெதிராமாண்டுசித்திரையாதிரையி,லாளுடையகதைமு
டிப்பமெனக்குன்றைவேந்தர் நடத்தவனைவருமிருந்துகே
ட்டனர்நாடோறும். (எ0)

இ-ள். திருவடிகளிற்பொருந்திய சிலம்பாண்டு சத்திக்க நடன ஞ்செய்யும் நடேசமூர்த்தியின் திருநாமத்துக்குரித்தாகிய நக்ஷத்திர

மும், திருஞானசம்பந்தசுவாமிகள் திருவவதாரஞ்செய்ததிருநக்ஷத்திரமும், அவர்அழுது ஞானப்பால் உண்டருளிய திருநக்ஷத்திரமும் உறுதிபொருந்திய திருவாதிரைநக்ஷத்திரமாம் - ஆதலால்சிகழுஞ்சித்திரைமாதம் திருவாதிரை நக்ஷத்திரநதொடங்கி மறுவருடம் சித்திரைமாதம் திருவாதிரைநக்ஷத்திரத்தில்இப்புராணத்தை நிறைவேற்றுவோமென்று சேக்கிழார்சுவாமிகள்-புராணத்தை அரங்கேற்றல்செய்ய அடியார்கள்யாவரும் மிகுந்தபத்தியுடனிருந்து நாடோறுங்கேட்டுக்கொண்டுவந்தனர்-என்க.

சிறப்புடையமூவர்முதலிகடிருவாய்மலர்ந்த- திருநெறியதமிழ்மூலர்திருமந்திரமாலை, யறப்பயனுங்காரைக்காற்பேயிரட்டைமாலை - யந்தாதிமூத்தபதிகங்கழுமிற்றறிவார், மறப்பரியபொன்வண்ணத்தந்தாதிதிருமும்- மணிக்கோவைதெய்வவுலாவையடிகள்வெண்பா, வுறுப்பாகத்திருவிருத்தமுடலாகப்பொருட்கோ- ளுயிராகநாலடியானடந்துலகெல்லாம். (எக)

இ-ள். புகழையுடையதிருஞானசம்பந்தசுவாமிகள் முதலியமூவர்முதலிகள் திருவாய்மலர்ந்தருளிய திருநெறித்தமிழ்வேதமாகிய திருமுறைகள் ஏழும். திருமூலர் திருமந்திரமாலையொன்றுந் தருமப்பயனுடைய காரைக்கால்அம்மையார் அருளிச்செய்த இரட்டைமணி மாலையொன்றும் அற்புதத்திருவந்தாதியொன்றும் மூத்ததிருப்பதிகம் இரண்டும் ஆகநான்குபிரபந்தமும் சேரமான்பெருமான்நாயனார்திருவாய்மலர்ந்தருளிய பொன்வண்ணத்தந்தாதியொன்றும் திருவாரூர்மும்மணிக்கோவையொன்றும் ஆதியுலாவொன்றும் ஆகியமூன்றுபிரபந்தமும் ஐயடிகள்காடவர்கோன் திருவாய்மலர்ந்தருளிய முத்திதிருவெண்பாவென்னும் பிரபந்தம்ஒன்றும் ஆகியஇவைகள் அவயவங்களாகவும் விருத்தங்கள்சரீரமாகவும் பொருள்கோள் ஆத்மாவாகவும்நாலடியால் இவ்வுலகமெல்லாம் நடந்தது-என்க.

அன்றுமுதனாடோறுநாடோறுமண்ணலடியாரளவிறந்தபெயர்வந்தவர்களெல்லாரு, மென்றுறையத்திருமடங்கடிருமடங்கடோறுந் திருவிளக்கங்கவர்சாத்தவுள்ளுடைமேற்போர்வை, துன்றியசெந்நெலினடிசில்கன்னனறுங்கனிகடுயவறுசுவைக்கறிநெய்தயிர்திரண்டபாறே, னன்றுதிருப்பண்ணியந்தண்ணீரமுதமடைக்காய் நரபதியேவலினமைச்சர்நாடோறுநடத்த. (எஉ)

இ-ள். அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறும் புராணங்கேட்கவந்த அளவிறந்த சிவனடியார்களெல்லாம் இருப்பதற்குமடங்களும் அம்மடங்கள்தோறும் விளக்குகளும் அவர்கள்தரித்துக்கொள்ள உளருடையும்போர்த்துக்கொள்ளப் போர்வைகளும்- பொருந்திய சம்பா நெல்லரிசிச்சாதங்களும்கற்கண்டுஇனியபழவர்க்கம்பரிசுத்தமாகிய ஷட்ரஸங்களோடுங்கூடிய பதார்த்தம் நெய் கட்டித்தயிர் திரட்டுப்பால் தேன் நல்லபணிகாரவர்க்கங்களும் தண்ணீரமுதும் முகவாசனையோடுங் கூடிய தாம்பூலமும் ஆகியஇவைகளையெல்லாம் சோழமகாராஜா உத்தரவினால மந்திரிகள்நாடோறும் நடத்திக்கொண்டுவர-என்க.

நலமலியுந்திருத்தில்லைமன்றினினின்றுநடராசற்கன்றுமுதன்மகபூசைநடத்தி,யலகில்புகழ்த்தில்லைவாழந்தணர்க்கும்வெவ்வே- றமுதுபடிகறியமுது முதலானவெல்லா, நலமலிசெங்கோல்வளவன்றப்பாமேநாளு நடத்திவரவரனடியார்நிறைந்துபதஞ்சலியும்,புலிமுனியுந்தவஞ்செய்த பெரும்பற்றப்புலியூர்பூலோகசிவலோக மெனப்பொலிந்துதோன்ற. (௭௩)

இ-ள். நன்மைமிகுந்த தில்லையிற்பொருந்திய சிற்சபையினிடத்து ஆநந்தநிர்த்தனஞ்செய்யும் நடேசமூர்த்திக்கு அன்றுமுதல் மகாபூசைகளைநடத்தி அளவில்லாத புகழையுடைய தில்லைவாழந்தணர்களுக்கும் வெவ்வேறுகஅமுதுபடி கறிகள் முதலாகியவைகளை யெல்லாம் மேன்மைபொருந்திய செங்கோலையுடைய சோழமகாராஜாதவறுமல் நாடோறும்நடத்திக்கொண்டுவர சிவனடியார்கள் நிறைந்து பதஞ்சலிவியாக்கிரபாத முனிவர்கள் தவஞ்செய்த பெரும்பற்றப்புலியூரொன்னும் ஸ்ரீ சிதம்பரமானது பூலோகசிவலோகமெனறு சொல்லும்படிப் பிரகாசிக்க-என்க.

மருவுதிருமுறைசேர்ப்பாரெழுதுவாரிருந்து-வாசிப்பார்பொருளுரைப்பார்கேட்டிருப்பார்மகிழ்ந்து, சிரமசைத்துக்கொண்டாடிக்குதிகுதுப்பார்சிரிப்பார்- தேனிப்பார்குன்றைமுனிச் சேக்கிழார்செய்த, வரியதவத்தினைநினைப்பா ரம்பலவர்முன்னு ளடியெடுத்துக் கொடுக்கவிவர்பாடினரென்றுரைப்பார், பெரியபுராணங்கேட்டவளவர்பிரான்செவிக்குப் - பிடிக்குமோவினிச்சிந்தாமணிப்புரட்டென்றுரைப்பார். (௭௪)

இ-ள். பொருந்திய திருமுறையெழுதப்புத்தகம்சேர்ப்பவர்களும் எழுதுபவர்களும் இருநது வாசிப்பவர்களும் அதற்குப்பொருள்சொல்

யார்களும் களிப்படைந்து கேட்டுக்கொண்டிருப்பவர்களும் சிரக்கம் பனம்செய்து கொண்டாடி மகிழ்ச்சியடைபவர்களும் ஆநந்தத்தினால் நகைகொள்பவர்களும் இனிபபுக்கொள்பவர்களும் சேக்கிழார்சுவாமிகள் செய்தருளிய அருமையாகியதவத்தைக்குறித்துப் பெரிதாகக்கருதுவார்களும் நடேசமூர்த்திமுன்னாள் முதலடியெடுத்துக் கொடுக்க சேக்கிழாாசுவாமிகள் பாடிமுடித்தனரென்றுபுகழ்பவர்களும்இந்தபெரியபுராணத்தைக்கேட்ட சோழமகாராஜாசெவிக்கு இனிசிந்தாமணியாகிய வெறுங்கதையேற்குமோவென்று சொல்பவர்களும்-என்க.

இத்தகையசிறப்புடனேதிருத்தொண்டர்புராண மிருந் தன்பர்பாராட்டநடந்தெதிராமாண்டு, சித்திரையாதிரைநாளின்முடியவ ., கண்டு திருத்தொண்டராரவெனும்பேரொலியெழுந்துபொங்கக்,கத்துதிரைக்கடலொலியைவிழுங்கி முழங்கோரேழ் - கடலொலியைக கீழ்ப்படுத்திப் பிரமாண்டவெளியைப், பொத்தியிமையவர்செவியை நிறைத்துயரப்பொங்கிப் - பொன்னுலகுக்கப்பாலும் புகப்பொலிந்ததன்றே (௭௫)

இ-ள். இந்தன்மையாகிய சிறப்புடனே திருத்தொண்டர்புராணத்தை அனபர்களிருந்து பாராட்டுதல்செய்ய அதுநடந்து மறுவருடம்சித்திரைமாதம் திருவாதிரைநக்ஷத்திரத்தில் நிறைவேற அதனையறிந்தசிவனடியார்கள்துதிக்கும் அரகரவென்னும் பேரோசையானது மேலோங்கி அதிகரித்து ஒலிக்காநின்றஅலையையுடையகடலின்ஒலியையடக்கி சத்திக்கின்றபெரும்புறக்கடலின் ஒலியையுமடக்கிப்பிரமாண்டவெளியைமூடித் தேவர்கள்செவியை நிறைத்துமேலேயெழுந்துதேவலோகத்துக்கப்பாலும்போயுருவிப்பொலிந்தது-என்க.

திருத்தொண்டர்புராணமெழுதிய முறையைமறையோர் - சிவமூலமந்திரத்தாலருச்சனைசெய்திறைஞ்சி,யிருக்குமுதன்மறைநான்கினின்றுமுதலாக - விதுவுமொருதமிழ்வேதமைந்தாவதென்று, கருத்திருத்தியமுதடைக் காயநறுந்தூபதீபங்- கவரி குடைகண்ணாடியாலத்திநீறு, பரித்தளவுசெயக்கண்டுவளவர்பிரான்முறையைப்- பசும்பட்டினாற் சூழ்ந்துபொற்கலத்திலிருத்தி. (௭௬)

இ-ள். திருத்தொண்டர்புராணத்தை யெழுதிய திருமுறையைத் தில்லைவாழந்தணர்கள் மூலபஞ்சாக்ஷரத்தால் அருச்சனைசெய்துவணங்கிஇருக்குமுதலாகிய நான்குவேதங்களுடன் இன்றுமுதல்இதுவும்

ஐந்தாவது தமிழ்வேதமென்று ஆவாகித்து பால் தாம்பூலம் நல்லது பதீபங்கள் சாமரைகுடைகண்ணாடி ஆலத்திவிபூதி முதலிய அஷ்டமங்கலங்களால் தேவஉபசாரஞ்செய்ய அதனைநோக்கித் தெரிசித்துச் சோழமகாராஜா திருமுறையைப் பொற்பட்டினாற்சூழ்வித்துப் பொற்றட்டில்வைத்தது-என்க.

செறிமதயானைச்சிரத்திற்பொற்கலத்தோடெடுத்துத்-தி
ருமுறையையிருத்தியபின்சேவையர்காவலனை,முறைமை
பெறவேற்றியரசனுங்கூடவேறி- முறைமையினுலிணைக்க
வரிதுணைக்கரத்தால்வீச, மறைமுழங்கவிண்ணவர்கள்கற்
பகப்பூமாரி- மழைபொழியத்திருவீதிவலமாகவரும்போ,
திறைவர்திருவருளை நினைந்தடலரசர்கோமானிதுவன்றே
நான்செய்ததவப்பயனென்றிசைத்தான். (௭௭)

இ-ள். மதத்தையுடையபட்டத்துயானையின் பிடரில் பொற்றட்டுடனெடுத்துத்திருமுறையைவைத்தபின்முறைமையாகச்சேக்கிழார்சுவாமிகளை யானையின்மேல் எழுந்தருளச்செய்து தாமுங்கூட அதில்ஆரூடம்செய்து முறைமைப்படிதமது இரண்டுகைகளாலும் இரண்டுசாமரைகளைவீச வேதங்கள்முழங்கவும் தேவர்கள்கற்பகமலர் மழையைப்பொழியவும் திருவீதியை வலமாகவரும்போது நடேசமூர்த்தியின் கிருபையைநினைந்து பெரியஅரசர்பிரானாகிய சோழமகாராஜா நான்செய்ததவப்பயன்இதுவல்லவோவென்றுஆநந்தித்துச்சொல்லினர்-என்க.

வாரணத்திலிவரைவரக்கண்டதிருவீதி மறுகுதொறுந்-
தூய்மைசெய்துவாழைகளுநாட்டிப்,பூரணகும்பமுமமை
த்துப்பொரியுமிகத்தூவிப்- பொன்னரிமாலையுநறும்பூமா
லைகளுந்தூக்கித், தோரணங்கணிரைத்துவிரைநறுந்தூப
மேந்திச்- சுடர்விளக்குமேற்றியணிமணிவிளக்குமேந்தி,
யாரணங்கள்விரித்தோதி மாமறையோரெதிர்கொண்-டாறு
கெடுப்பவாழ்த்தெடுத்தாரரம்பையர்களெல்லாம். (௭௮)

இ-ள். சேக்கிழார்சுவாமிகள் அரசனுடன் யானையின்மீது ப்வனிவரக்கண்ட வீதிகள்தோறும் மெழுக்கிட்டு வாழைமரங்களை நாட்டிப் பூரணகும்பங்களும்வைத்து பொரிகளை அதிகமாகத்தூவிப் பொன்னரிமாலைகளையும் மணமுள்ள புஷ்பமாலைகளையும் தொங்கக்கட்டி தோரணங்கள் நிரைத்து நல்லதூபமெடுத்து தீபங்களேற்றி அழகியமாணிக்கதீபங்களும்வைத்து விரிவாய் வேதங்களோதி பிராமணர்கள் எதிர்கொண்டுவந்து அறுகினுல் ஆலாத்திசெய்ய அரமாதர்கள் மங்களம் பாடினார்கள்- என்க.




பொல்லாப்பிள்ளையாருக்கு நம்பியாண்டார் மகா நைவேத்தியம்செய்து அத்தியயனம்பெறரது.

### வேறு.

" காவலனிவர்தவசிவர்காவலர் கவரியிடத்தகுமோவெ
ன்பார், சேவையர்காவலனார்சிவமானசிறப்பிதுநல்லசிறப்
பென்பார், தேவருமெழுதவொண்ணுமறையைத்தமிழ்செய்
துதிருப்பதிகம்பாடு. மூவருமொருமுதலாயுலகத்துமுளை
த்தமுதற்பொருடானென்பார். (எசு)

இ-ள். இவரோ அரசர் அவரோ தவசி அரசர் சாமரைபோடத்தகுமோவென்று சிலர்சொல்வார்கள் சேக்கிழார்சுவாமிகள் சிவவேடங்கொண்டசிறப்பாகியஇது திவ்யமானசிறப்பென்றுசிலர் சொல்வார்கள் தேவரும் எழுதறகரியவேதத்தைத் தமிழ்செய்து திருப்பதிகம்பாடியருளிய மூவர் முதலிகளும் சேக்கிழார்சுவாமிகளென ஒருமூர்த்தியாய இவ்வுலகத்தில் திருவவதாரஞ்செய்த முதன்மையானபொருளேயென்று சிலர் சொலவார்கள் - என்க.

மின்மழைபெய்தநுமேகவொழுங்குகள்விண்ணவர்கற்
பகவிரைசேர்பூ,நன்மழைபெய்தனர்()சேவையர்காவலர்நா
வலரின்புறநாவாரச்,சொன்மழைபெய்தனரிரவலர்மிடிகெ
டவள்ளிமுகந்தெதிர்சோளேசன், பொன்மழைபெய்தன
னுருகியநெஞ்சொடுகண்மழையன்பர்பொழிந்தார்கள். ()

இ-ள். மேகசாலங்கள்மின்னலுடனே மழைபெய்தன தேவர்கள் கற்பகவிருக்ஷத்தின் வாசனைபொருந்திய புட்பமாரிபெய்தனர். சேக்கிழார்சுவாமிகள்பேரிலவித்வான்கள்இன்பத்துடனவாக்கினல் பாடலாகியமழைபெய்தனர்சோழமகாராஜாயாசகரது*வறுமையானகோடைநீங்கும்படி அள்ளியள்ளியெடுத்துப் பொன்மலைழபெய்தனர் - அடியார்கள் உருகியமனமுடன்ஆநந்தக்கண்ணீரமழைபெய்தனர் - என்க.

மதுரவிராமாயணகதையுரைசெய்த வான்மிகபகவனு
மொப்பல்ல, விதிவழிபாரதமுரைசெய்துகதைசெய்தவே
தவியாதனுமொப்பல்ல, சிதைவறவாயிரநாவுடனிவ்வுளசே
டவிசேடனுமொப்பல்ல, பொதியமலைக்குறு முனிவனு
மொப்பல புகழ்புனைகுன்றைமுனிக்கென்பார். (அக)

---

() சேவையர்காவலர்நாவலரின்புறநாவாரச்,சொன்மழைபெயதனர் என்பதற்கு - சேவையர்காவலர் இன்புறநாவலர்நாவாரச்சொன்மழை பெய்தனரெனக்கொண்டுகூட்டிப்பொருளுரைக்கினுமமையும்.

* பொன்மழையென்றதால்வறுமைக்கோடையென்றுரைக்கப்பட்டது.

இ-ள். புகழ்மாலைபூண்ட சேக்கிழார்சுவாமிகளுக்கு மதுரமாகிய இராமாயணகாவியத்தைச்செய்த வான்மீகமுனிவரும்ஒப்பல்லர்: சிரமமாகப் பாரதத்தைக்காவியமாகச்செய்துமுடித்த வேதவியாசரும் ஒப்பல்லர்: பழுதறஆயிரம்நாவுள்ளஅறிவினமேம்பட்டஆதிசேடனாகிய மகானும் ஒப்பல்லன: பொதியமலையிலவீற்றிராநின்றஅகஸ்தியமுனிவரும்ஒப்பல்லரென்றுசொல்வார்கள்- என்க.

மெய்யுளசிவசாதனமும்வெளிப்பட வெண்ணீறெழுதியகண்ணேறுங், கையுந்திகழ்மணிகண்டமுமொளிதருகவளிகையும்புத்தகவேடு, மையுந்திருவுளமழியுந்தொறுமரகரவெனுநாமமுநாமெல்லா, முய்யும்படியருள்கருணையுமழகிதெனத்தொழுதனருலகவரெல்லாம். (அஉ)

(இ-ள்.) சேக்கிழார் சுவாமிகளது திருமேனியின்கண்ணுள்ள சிவசாதனங்களும் யாவர்க்குந் தெரியும்படி விபூதிதரித்திருக்கும் காட்சியும் அஞ்சலியஸ்தமும் ருத்திராக்ஷமணிநதகண்டமும் விளக்கமுள்ள புததகக்கவளிகையும் புத்தகஏடும் கனிந்த உள்ளமானது உருகுந்தோறும் அரகரவென்கிற ஒலியும் நாமெல்லாம் பிறவித்தடுமாற்றத்தினின்றும் பிழைக்கும்படி யருளும் கிருபாநோக்கமும் அழகுள்ளனவென்றுசொல்லியுலகத்தாரெல்லாம் தொழுதனர்-என்க.

பூவைமறந்தனள்வெண்டாமரைமயில் புகல்தருசங்கப்புலவோர்சொற், பாவைமறந்தனள்தேசசுபாடித பயனைமறந்தனள்பதுமத்தோ, னாவைமறந்தனள்பொதியமலைத்தலைநண்ணியபுண்ணியமுனிவனெனுங், கோவைமறந்தனள்சேவையர்காவலனார்திருநாவிற்குடிகொண்டாள். (அங)

(இ-ள்.) சரஸ்வதியானவள் தனக்கிடமாகிய வெள்ளைத்தாமரைமலரை மறந்தனள் புகழும்படியான சங்கத்தார்களுடைய சொல்நிறைந்த காவியங்களை மறந்தனள் - தேயத்திலுள்ளோரிடத்து நிகழும் இனிய சொற்றிரளின் பயனைமறந்தனள் பிரமதேவனுடைய நாவையுமறந்தனள் பொதியமலையில் வீற்றிருக்கும் சிவபுண்ணியமிக்க(தமிழாசிரியரான) அகஸ்தியமுனிவரை மறநதனள்சேக்கிழார்சுவாமிகளுடைய திருநாவினிடத்திலவந்து குடியாயிருநதனள் - என்க.

இப்படியிப்படிதன்னில்விதிப்படி யிம்பருமும்பருமேனோரு, மப்படிசூழவரத்திருவீதிவலஞ் செய்தணைந்தம்பலமுன்றிற், றப்பறயானையினின்றுமிழிந்தரசனுமுனைசெறிசேவையர்கோவு, முப்புரிநூன்மறையோரொடணைந்தெழுதியமுறையைத்திருமுன்வைத்தார். (அச)

(இ-ள்.) இவ்வாறு இவ்வுலகத்தின்கண்முறையாகத் தேவர்களும் மனிதர்களும் மற்றையரும் அத்தன்மையாய்ச் சொல்லித் துதித்துக் கொண்டுசூழ்ந்துவரத்-திருவீதிவலஞ்செய்து சிற்சபையின்திருவாய்தலின்கண்வந்து மேன்மையுள்ள சேக்கிழார்சுவாமிகளும் சோழமகாராஜாவும் நன்மையுற யானையைவிட்டிறங்கி முப்புரிநூலணிந்ததில்லைவாழந்தணர்களுடன் உள்ளேசென்று எழுதியதிருமுறையை நடேசர்சந்நிதியின்கண்வைத்தனர்- என்க.

வேறு.

அண்டவாணரெதிர்தெண்டனுகவனை வரும்விழுந்தபி
னெழுந்துசீர், கொண்டசேவைகுலதிலகருக்கனைவருங்கு
றித்தெதிர்கொடுத்தபேர்,தொண்டர்சீர்பரவுவாரெனப்பெ
யர்சுமத்திஞானமுடிசூட்டிமுன், மண்டபத்தினிலிருத்தி
மற்றவனைவளவர்பூபதிவணங்கினன். (அரு)

(இ-ள்.) பல்லாயிரகோடி அண்டங்களினும் பரிபூரணராய்நிறைந்துள்ள தேவதேவராகிய நடேசமூர்த்தி சந்நிதியில் அஷ்டாங்கபஞ்சாங்கமாக யாவரும் நமஸ்கரித்தெழுந்து சிறப்புப்பொருந்திய,சேக்கிழார்சுவாமிகளுக்கு யாவருஞ்சொல்லியபேராவது (தொண்டர்சீர்பரவுவார்) அடியார்கள் சிறப்பினைத்துதிசெய்கின்றவரெனப்பெயர் கொடுத்து ஞானமகுடாபிஷேகஞ்சூட்டி மண்டபத்தில் அவரை யெழுந்தருளியிருக்கச்செய்து சோழமகாராஜாவானவர் சேவித்துக்கொண்டனர்- என்க.

மூவரோதுதிருமுறைகளேழுதிருவாதவூர்முறையொ
ன்றிசைப், பாவமைந்தமுறையொன்றுமூலர்முறை யொ
ன்றுபாசுரமதாதியாக், கோவைசெய்தமுறையொன்றுசே
வையர்குலாதிநீதிமுறையொன்றுடன், பாவைபாகர்திரு
வருள்சிறந்தமுறைபன்னிரண்டெனவகுத்தபின். (அசு)

(இ-ள்,) திருஞானசம்பந்தசுவாமிகள் முதலாகிய மூவர் அருளிச்செய்த திருமுறைகள் ஏழு. மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருமுறையொன்று, திருவிசைப்பாவென்னும் திருமுறையொன்று. திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரமென்னும் திருமுறையொன்று - சொக்கநாதசுவாமி திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரமுதலாகச் சேர்க்கபபட்டுள்ள பிரபந்ததிருமுறை யொன்று. சேக்கிழார்சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டர்புராணமாகிய திருமுறையொன்றுடன் பார்வதிபாகராகிய பரமசிவத்தின் திருவரு

ள் நிறைந்திருக்கும்திருமுறைகள்பன்னிரண்டாக ஏற்படுத்தியபின்ன ர்- என்க.

ஆளுடையபிள்ளையார் திருமுறை- ங, அப்பர்சுவாமிகள் திருமுறை-ங, சுந்தரமூர்த்திசுவாமிகள்திருமுறை-க. ஆக-எ-ம், மாணிக்க வாசகசுவாமிகள் திருவாசகமும் திருச்சிற்றம்பலக்கோவையாரும்சேர்ந்ததிருமுறை-க-ம்,திருமாளிகைத்தேவர்,கருவூர்த்தேவர், நம்பிகாடவர்கோன,கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார்,புருடோத்தமர், சேதிராயராகிய இவ்வெண்மர் அருளிச்செய்ததிருவிசைப்பாத்திருப்பதிகங்களிருபத்தெட்டும், சேந்தனாரருளிச்செய்த திருப்பல்லாண்டொன்றும்,ஆக-உக-ம்சேர்ந்ததிருமுறை-க-ம்,திருமூலர்ஆண்டுக்கொருதிருமந்திரமாக மூவாயிரம் ஆண்டளவும்அருளிச்செய்ததிருமந்திரத் திருமுறை-க-ம், சொக்கலிங்கமூர்த்தி பாணபத்திரர்பொருட்டுச் சேரமான்பெருமாள் நாயனாருக்குஎழுதியருளிய திருமுகப்பாசுரம் முதலாகக்கோத்த முப்பத்தாறு திவ்வியபிரபந்தங்கள் சேர்ந்த திருமுறை-க-ம், ஆகிய பதினொன்றுடன் திருத்தொண்டர்புராணமென்னும் பெரியபுராணம் ஒன்றும்சேர்ந்து பன்னிரண்டுதிருமுறையாம் இவற்றின்வகையைத் திருமுறைகண்டபுராணத்திற் கண்டுகொள்க.

தோடுசெய்ததிருநெறியசெந்தமிழோ டொக்குமென்
றுரைதொடர்ந்துசெப்,பேடுசெய்துநடராசர்சந்நிதியிலே
ற்றினார்களிதுபாலிசூழ், நாடுசெய்ததவமீடுகுன்றைவளந
கரிசெய்ததவங்கரிலாப், பீடுசெய்தபகிரதிகுலத்திலகர்சே
க்கிழார்செய்தபெருந்தவம். (அஎ)

(இ-ள்.) தோடுடையசெவியனென்று ஆளுடையபிள்ளையார்-முதற்பாசுரமெடுத்தோதியருளிய செவ்விய திருநெறித்தமிழ்வேதமாகிய தேவாரத்துடன் இஃதும்ஒப்பாகுமென்று முதல்தொடங்கிச் செப்பேட்டிலெழுதி நடேசமூர்த்தியின் சந்நிதியில்வைத்தார்கள் இது பாலாறுசூழ்ந்த தொண்டைநாடு செய்ததவம் வளமிகக குன்றத்தூரென்னும் நகரம் செய்ததவம். ஒப்பில்லாதபெருமைபொருந்தியகங்காகுலோத்துங்கராகிய சேக்கிழார்மரபினர்செய்த பெரியதவமாம்- என்க.

ஆயவேலையநபாயனிங்கிலைமை யாதலாலநுசர்பாலரு,
வாயமொங்குளமொனப்பணிந்திரு மருங்குநின்றவர்விளம்பு
வார், தூயகுன்றைநகர்மீதுதம்பெயர் துலங்கவோர்குள
மமைத்தபி, னேயநாகையரனார்திருப்பணியியற்றியவ்வி
டையிருந்தனர். (அஅ)

(இ-ள்.) அப்போழ்து அநபாய சோழச்சக்கிரவர்த்தி சேக்கிழார்சுவாமிகள் தன்மையிவ்வாறுயினதால்இவர்க்கிளைஞராகிய பாலறுவாயர் எங்கிருக்கின்றனரென்றுவினவ, இருபக்கத்திலுமிருந்தவர்கள் வணங்கிச்சொல்லுவார்கள் மேன்மைமிக்க குன்றத்தூரில் தமது பெயர் விளங்கும்படி பாலறுவாயன்கேணியென்று ஒருதடாகம் அமைத்து-பிறகு தமக்கு அத்தியந்தப்பிரியமாகிய திருநாகேசுரர் ஆலயத்திருப்பணியுஞ் செய்துகொண்டு அவ்விடத்திலிருக்கின்றனர் - என்க.

எனறுசொல்லவவர்தமையழைத்தரச னிவரமைச்சரிவ
ர்பட்டமு, மன்றன்மாலைபுனைதொண்டைமானென வருந்
தபின்றமதுமண்டல, மன்றுவறபம்வரவந்தடைந்தவரை
யாற்றல்செய்துதொண்டைமண்டல, நின்றுகாத்தபெருமா
னெனத்தமது பெயரையெங்கணுநிறுத்தினர். (௮௬)

(இ-ள்)என்றுசொல்லச்சோழமகாராஜாஅவரைவரவழைத்து (இது முதல்)இவர்மந்திரியென்றுசொல்லிநறியமாலையணிந்த தொண்டைமானெனப்பட்டப்பெயருங்கொடுத்தபின்தமதுதொண்டைநாட்டில்அக்காலத்தில்கருப்புவர அங்கிருநதுவந்துசேர்ந்தவர்களையெல்லாம் ஆதரணைசெய்து தொண்டைமண்டலங் காத்தபெருமானெனத் தமது பெயரை அஷ்டதிக்கெங்கும் நிலைநிறுத்தினர்- என்க.

தொண்டர்சீர்பரவு சேக்கிழார்குரிசி றூயதில்லைநகர்த
ன்னிலே, பண்டு மூவர்பதிகத்து வந்தவறுபத்துமூவர்க
தைதனையுணர்ந், தண்டவாணரடியார்கடம்முட னருந்தவ
ந்தனிலிருந்துபி, னிண்டைவைத்தசடையம்பலத்தவ னெ
டுத்தபாதநிழலெய்தினர். (௮௭)

(இ-ள்.) அடியார்கள் சிறப்பினைத் துதிசெய்த சேக்கிழார்சுவாமிகள் தூய்மையாகிய தில்லைக்ஷேத்திரத்தில வீற்றிருந்து பழமையான மூவர்களுடைய திருப்பதிகத்திற்சொல்லியஅறுபத்துமூவர் சரித்திரத்தைத் தியானஞ்செயதுகொண்டு சிவனடியார்களுடன் அருமையாகியதவத்திலிருந்து பிறகு இண்டைமாலையைத்தரித்த நடேசமூர்த்தியின் குஞ்சிதபாதநிழலிலடைந்தனர்- என்க.

வாழிதில்லைமணிமன்றுளென்றுநட மாடுமங்கணர்மல
ர்ப்பதம், வாழிகாழிநகர்வாழவந்ததிரு ஞெறியராதிபதிவ
ள்ளல்தாள், வாழியன்பர் திருநீறுமிட்டதிரி முண்டமுங்

துலயகவசமும், வாழிகுன்றைமுனிசேவையாதிதிருவா
ய்மலர்ந்தருள்புராணமே. (௬௧)

(இ-ள்.) தில்லையின்கண் அழகிய சிற்சபையினிடத்து சதாகிர்த்தனஞ் செய்தருளும் நடேசமூர்த்தி மலர்த்திருவடிகள் வாழ்க; சீகாழியானது வாழும்படி திருவவதாரஞ்செய்தருளிய திருநெறித்தலைவராகிய திருஞானசம்பந்தசுவாமிகள் திருவடிகள் வாழ்க அடியார்க்குரிய விபூதியும் திரிபுண்டரமும் காவிருத்திராக்ஷமும் வாழ்கருன்றதூரிலவதரித்துள்ள சேக்கிழார்சுவாமிகள்திருவாய்மலர்ந்தருளியதிருத்தொண்டர்புராணம் வாழ்க- என்க.

தேசிலங்குமுகில்குன்றையாதிபதி தொண்டர்சீர்பரவு
சேக்கிழார், வாசலன்றுமுதலின்றுகாறுமினி மேலும்வா
ழையடிவாழையா, வீசுதென்றன்மணிமண்டபத்தரசு வீ
ற்றிருக்குமுடிமன்னருக், கீசனன்பர்கள்புராணமுஞ்சொ
லியமைச்சுமாகிநலமெய்துமால். (௬௨)

(இ-ள்.) தேஜஸுடனே விளங்குகின்ற மேகத்துக்கொப்பாகிய விதரணமுள்ள குன்றைநகர்த்தலைவரான அடியார்கள் சிறப்பினைப்பாடியருளிய சேக்கிழார்சுவாமிகள் மரபு அற்றைதொட்டிறறைவரையும் இனிமேலும்வாழையடிவாழையாயோங்கத் தென்றற்காற்று வீசும்படி ரத்தினமண்டபத்தில வீற்றிருக்கின்ற சோழராஜர்களுக்குச் சிவனடியர் புராணத்தைச்சொல்லிக்கொண்டு மந்திரிகளுமாகியிருந்து சுபம் பெறக்கடவது- என்க.

அண்டவாணர்தொழுதில்லையம்பலவ ரடியெடுத்துலகெ
லாமெனத், தொண்டர்சீர்பரவுசேக்கிழான்வரிசைதுன்று
குன்றைநகராதிபன், றண்டகாதிபதிதிருநெறித்தலைமை
தங்குசெங்கைமுகில்பைங்கழற், புண்டரீகமலர்தெண்ட
னிட்டுவினை போக்குவார்பிறவிநீக்குவார். (௬௩)

(இ-ள்.) தேவதேவரும் யாவருந்தொழுகின்ற தில்லையம்பலவருமாகிய நடேசமூர்த்தி உலகெலாமென்று முதலடியெடுத்துக்கொடுத்த வாற்றல் அடியார்கள் சிறப்பினைத் துதிசெய்த சேக்கிழானென்பவரும் சிறப்புமிக்க குன்றைநகருக்கதிபருந்தண்டகநாட்டுத்தலைவருமாகியதிருநெறித்தலைமைநிலைபெற்ற வள்ளன்மைமிக்கமேகத்தையொப்பாகிய அருண்மொழித்தேவரது திருவடித்தாமரைகளுக்குத் தெண்டனிட்டு நல்வினை தீவினைகளைப் போக்குகின்றவர்களே- ஜென்மத்தையும் கடப்பவர்களாம்- என்க.

வேறு.

சிறப்புப்பாயிரம்.

திருக்கிளருங்கயிலைமலைக்காவல்பூண்ட செல்வமலிதிருநந்திமரபில்வந்து, கருக்குழியிலெமைவீழா தெடுத்தாட்கொள்ளுங் கருணைமிகுமெய்கண்டதேவர்தூய, மருக்கிளர்தாள்பரவுமருணந்திதேவா மகிழுமறைஞானதேவருக்கன்பாகி, யிருக்குமுமாபதிதேவர்சேக்கிழார்தமிசைப்புராணம்புனைந்தாரென்பமாதோ. (௬௪)

(இ-ள்.) முத்திச்செல்வம் விளங்குகின்ற ஸ்ரீகயிலாயத்தைக் காவல்செய்யும் அதிகாரமிக்க நந்திதேவர்மரபில் அவதாரஞ்செய்து ஜெனனசாகரததில் வீழாவண்ணம் அடியோங்களையெடுத்தாட்கொள்ளும்கிருபைமிகுந்தமெயகண்டதேவரது பரிசுத்தமாகிய வாசனைமிக்கதிருவடியைத்துதிக்கும்அருணந்திதேவர்மகிழும்படியானமறைஞானசம்பந்தசிவாசாரியருக்குஅன்பாய்வீற்றிருக்கும் உமாபதிசிவாசாரியர் சேக்கிழார் சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர்புராணவரலாற்றை விரிததுச்சொல்லினார்- என்க.

சந்தானசாரியர் நால்வருளொருவராகிய உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

சேக்கிழார்சுவாமிகள்புராணமென்னும்

திருத்தொண்டர்புராணவரலாறு - முற்றிற்று.

---

ஆ-திருவிருத்தம் - ௱௪.



சிறப்புப்பாயிரப் பகுவலிற்குறித்த

வேதசைவசித்தாந்தசம்பன்ன சந்தானசாரியர்கள்

வரலாற்றின் சுருக்கம்.

---

அவருள்முதல்வர்திருநந்திதேவர் - அவர்மாணக்கர் சனற்குமாரமாமுனிவர், அவர்மாணக்கர் சத்தியஞானதரிசனிகள், அவர்மாணக்கர் பரஞ்சோதிமாமுனிவர், அவர்பரமசிவத்தின்அருளுப்பாட்டினால் ஸ்ரீகைலாசத்தினின்றும் தெக்ஷிணத்திற் கெழுந்தருளியநாளில் அவர்பால்

# சேக்கிழார்சுவாமிகள்புராணம்.

சிவஞானோபதேசம்பெற்றவர் திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டசிவாசாரியர் என்னும் சுவேதவனப்பெருமாள் அவர்பாலுபதேசம்பெற்ற நாற்பத்தொன்பதின்மருள் சிரேட்டராய்த் திருத்துறையூரின்கண் வீற்றிருந்த சகலாகமபண்டிதரென்னும் அருணந்திசிவாசாரியர் அவர்மாணாக்கராய் ஸ்ரீசிதம்பரத்திலெழுந்தருளியிருந்த மறைஞானசம்பந்தசிவாசாரியர், அவர்மாணாக்கர் தில்லைவாழந்தணர்களிலொருவராய் அத்தலத்தைச்சார்ந்த கொற்றவன்குடியிலெழுந்தருளியிருந்த உமாபதிசிவாசாரியர் அவர் சேக்கிழார்சுவாமிகள் பெரியபுராணம்பாடியருளியவரலாற்றைத் திருத்தொண்டர்புராணவரலாறென்றுபாயிரத்துடன்னூற்றுமூன்றுதிருவிருத்தங்களாலருளிச்செய்தது திருமுறைகண்டபுராணம்திருத்தொண்டர்புராணசாரமுதலிய சித்தாந்தநூல்களும்பணித்தருளினர்.

---

சேக்கிழார்சுவாமிகள்திருவடிகளேசரணம்

திருச்சிற்றம்பலம்.











சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைகண்டபுராணம்:

கருமுறைவிண்டடியவருயுமாறருள் கவுணியர்குலதீபந், தருமிறைநாவுக்கரசாரூரர் தாஞ்சேமித்திடுமத், திருமுறைகண்டபுராணமுரைக்கச் சிந்துரமுகனற்றாள், ஒருமுறையிருமுறைமும்முறைவாழ்த்தியுவந்தன்போடுபணிவாம்.

(இ-ள்) ஜனனத்தொடக்குநீங்கி அடியார்க ளீடேறும்நெறியை அருளாநின்ற கவுணியகுலத்தில் தீபம்போல் அவதரித்த திருஞானசம்பந்தசுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளும் சுந்தரமூர்த்திசுவாமிகளும சேமித்துவைத்தபிரசித்தமான திருமுறைகண்ட புராணத்தைச் சொல்வதற்கு யானைமுகக்கடவுளின் நல்லதிருவடிகளை ஒருகாலும் இருகாலும் முக்காலும் துதித்துக் களித்துச் சிவநேசத்தோடு வணங்குவாம்-என்க.

வேறு.

உலகமகிழ்தருசையமீது தோன்றி-யோவாதுவருபொன்னிசூழ்சோணாட்டின், திலகமெனவிளங்குமணி மாடவாரூர்த்தியாகேசர்பதம்பணிந்துசெங்கோலோச்சி,யலகி

ல்புகழ்பெறுராசராசமன்ன-னபயகுலசேகரன்பாலெய்து
மன்பர், இலகுமொருமூவரருள்பதிகமொன்றொன்-றேயி
னிதினுரைசெய்யவன்பாற்கேட்டு. (க)

(இ-ள்.) உலகத்தார் மகிழ்ச்சிகொள்கின்ற சையமலைமேற்றோன்றி யிடைவிடாது பெருகிவருகின்றகாவிரிசூழ்ந்த சோழநாட்டிற் பூதேவிக்குத் திலகம்போல் விளங்காநின்ற - மணிமாடங்களையுடைய திருவாரூரினகண் தியாகேசர் திருவடிகளைப் பணிந்து செங்கோலுலக முழுதும் நடாத்தி அளவில்லாத புகழ்பெற்ற ராஜராஜமன்னவனென்னும் அபயகுலசேகர சோழமகாராஜா தம்மிடத்தில் வருகின்ற சிவனடியார்கள்நிலைபெற்றுள்ள ஒப்பற்றமூவர்முதலிகள் அருளியதிருப்பதிகங்களில் சிலசில இனிதாகஓதுதலும்அவற்றைச்சிவநேசத்துடன்கேள்வியுற்று-என்க.

கையிரண்டுமுச்சிமேலேறக்கண்ணீர்-கணாந்தோடமெ
ய்ம்முழுதும்புளகம்போர்ப்ப, வையன்மலர்ப்பதமுளத்தே
கொண்டுபோற்றி- யரியமுறைதேடவெங்கு மிலாமையா
லே,நையுமனத்தினனாகியிருக்குங்காலை- நாரையூரினிலா
திசைவமறையோன்பால், வையமெலாமீடேறச்சைவம்வா
ழ-மாமணிபோலொருசிறுவன்வந்துதோன்றி. (உ)

(இ-ள்.) இரண்டுகைகளுஞ் சிரசின்மேலேறவும் கண்ணீர் அதிகரித்துப்பெருகவும் தேகமெங்கும்புளகாங்கிதமாகவும் சிவபெருமானது ஸ்ரீபாதத்தை யுள்ளத்திற்கொண்டுபோற்றிப் பெறுதற்கரியதிருமுறைகளைத் தேசங்கள்தோறும் தேடிப்பார்க்க எவ்விடத்தும்அகப்படாமையால் மகாராஜா வருந்தியமனத்தையுடையவரா யிருக்குங் காலத்தில் திருநாரையூரென்னும் திருப்பதியின்கண் ஒரு ஆதிசைவவேதியரிடத்தில் உலகுயிரெல்லாங் கடைத்தேறவும் சைவநெறிதழைக்கவும் மாணிக்கம்போல ஒருமைந்தர் அவதரித்து-என்க.

வளமொடுபநயனவிதிச்சடங்கும்பூண்டு - மறைமுதலா
ங்கலைபயின்றுவருநாளின்ற, கிளர்மறையோனொரூர்க்குச
செல்லமைந்தன் கேடில்பிதாவுரைத்தமொழிப்படியே யங்
கி, யிளமதிசெஞ்சடைப்பொல்லாப்பிள்ளையாரை யேத்
தியாராதிப்பானினிதினேகி, யுளமலியன்பொடுதிருமஞ்
சனமுன்னாகு-முரியவெலாஞ்செய்துநிவேதனமுன் வை
த்து. (௩)

(இ-ள்.) சிறப்பாகஉபநயனவிதிச்சடங்குகளுஞ்செய்யக்கொண்டு வேதமுதலியகலைகளைக் கற்றுவருகின்றநாளில் தம்மைப்பெற்றதந்தை

யாகிய வேதியர் ஒரூர்க்குப்போனபடியால் புத்திரன் அழிவில்லாத தந்தைசொன்ன சொற்படியே அந்திக்காலத்தில்தோன்றுகின்ற இளம்பிறையைத்தரித்த செஞ்சடையையுடைய திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரைத்துதித்து ஆராதிக்கும்பொருட்டு இனிதாய்ச் சென்று உள்ளத்தில் மிகுந்தஅன்புடனே திருமஞ்சனமுதலியவனைத்துஞ்செய்து நிவேதனத்தைப் பிள்ளையார்திருமுன்வைத்து-என்க.

எம்பெருமானமுதுசெயவேண்டுமென்ன விறைஞ்சிட்
டுமமுதுசெயாதிருப்பக்கண்டு,வெம்பியுளமேதேனுந் தவ
றிங்குண்டோ-வேழமுகனேயடியேனிவேதித்திட்ட, பம்
பமுதமுண்ணாததென்னையென்னப்-பரிந்துதலைதனைமோ
தப்புகுங்காலெம்மா, னம்பிபொறுவெனத்தடுத்தவ்வமுத
மெல்லா-நன்கருந்தவுவந்துநம்பிநவில்வதானான். (௪)

(இ-ள்) எம்பெருமானே இதனையமுதுசெய்யவேண்டுமென்றுபிரார்த்தித்துப் பணியவும் விநாயகர்அமுதுசெய்யாமலிருப்பதுகண்டுஉள்ளம்நொந்து இவ்விடத்தில் ஏதேனுந்தவறுண்டாயிற்றோ யானைமுகக்கடவுளே அடியேன் நிவேதனமாகவைத்த மிக்கஅமுதத்தை யுட்கொள்ளாதிருப்பது யாதுகாரணமெனறிரந்துகேட்டு வருந்தித் தமது தலையை மோதிக்கொள்ளப் புகுந்தபோது எமதாண்டவராகிய பிள்ளையார் நம்பியே பொறுவென்று தடுத்துஅவ்வமுதையெல்லாம் களிப்புடன் அருந்தி-லும் நம்பியாண்டார் மகிழ்ந்து சொல்லத்தொடங்கினர்-என்க.

எந்தையேயினியடியேன்பள்ளிக்கேகி-லெங்கடேசிகனடிப்பானாதலாலே, சந்தமறைமுதற்கலைகணீயே யோதித்
தரல்வேண்டுமெனவேழமுகத்தோன்றானு, மந்தமறவோதுவிக்கவோதிநம்பி மகிழ்ந்தனனன்றதுபோலமற்றைநாளும், விந்தையொடுநிகழநம்பியாண்டார்நம்பி மேவியிருந்திடுஞ்செய்திவேந்தன்கேளா. (௫)

(இ-ள்.) எமதுதந்தையே இனிமேல் அடியேன் பள்ளிக்குச்சென்றால் எங்கள் உபாத்தியாயன் அடிப்பன் ஆதலால் சந்தத்தோடுங்கூடிய வேதமுதலாகிய கலைகளைத்தேவரீரே கற்பித்தருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அவ்வாறே அவிச்சைத் தடைநீங்கும்படி வேதமோதுவித்தருள நம்பியாண்டார்கற்று அன்று மகிழ்ச்சி கூர்ந்தனர் அவ்வாறாகவே மற்றைநாட்களிலும் நடந்துவர நம்பியாண்டார்நம்பி பயின்றுவருஞ்செய்தியை ராஜராஜகுலசேகர சோழமகாராஜாவானவர் கேள்வியுற்று-என்க.

செல்வமிகு திருநாரையூரின்மேவுஞ் சிவனளித்தமதக
ரிக்குசசிந்தைகூர்ந்து, நல்லபுகழுடையநம்பி யாண்டார்
நம்பி-நண்பினொடுநிவேதிப்பான்மதுரமிக்க, வெல்லையில்
வாழைக்கனி தேனவலோடப்ப மெள்ளுண்டை யிவ்வுல
கோடுக்கவென்றே, மல்லன்மிகு சேனையுடனிராசராச
மன்னவனுமந்நகரில்வந்துசேர்ந்தான். (சுா)

(இ-ள்.) வளப்பமிகுந்த திருநாரையூரிற் கோயில்கொண்டிராநி
ன்ற சிவபெருமானீன்றருளிய யானைமுகக்கடவுளுக்கு -, மனமகிழ்ந்
தமிக்கபுகழுள்ளநம்பியாண்டார்நம்பியைக்கொண்டு சிவநேசத்துடன்
நிவேதனஞ்செய்விக்கும்பொருட்டுச் சுவைமிகுந்த அளவற்றவாழை
க்கனிகளுங் கட்டித்தேனும் அவலும் அப்பங்களும் எள்ளுண்டைமு
தலியவையும் இந்நகரத்திலுள்ளார் கொணாகவென்று கட்டளைசெய
து வலிமைமிகுந்த சேனைகளோடும் இராஜராஜசேகரரும நாரையூரி
ல்வந்துசேர்ந்தனர்-என்க.

ஆங்கதனுக்கந்நகரி லிடம்போதாம லயஸ்சூழப்பதின்
காதவகலவெல்லை, மாங்கனிவாழைக்கனிகள்வருக்கையா
வும்வந்தனவவ்வெல்லையெல்லாமருவவைத்துப், பாங்கினு
டனம்பிதாள்பணிந்துமன்னன்- பலகனிகள்கொணர்ந்த
வெலாம்பகர்ந்துபோற்றி, யீங்கிதனைப்பொல்லாதபிள்ளை
யாருக்-கிப்பொழுதேநிவேதிக்கவென்றுசொன்னான் (எ)

(இ-ள்.) அவ்வாறு அவர்கள் கொண்டுவந்த பண்டங்களுக்கு நா
ரையூரில் இடம்போதாமையால் அவ்வூர்ப்புறத்தில் பதின்காதம் அகல
மான எல்லைவரையில் மாங்கனிகளும் வாழைக்கனிகளும் பலாக்கனிக
ள்முதலியனவுமாக வந்தவைகளை அங்கங்கே யிருத்தி மகாராஜாவானவ
ர்அன்புடன் நம்பியாண்டார்நம்பியினுடையபாதத்தைவணங்கித் தாம்
கொண்டுவந்த பலவகைப்பட்ட கனிவர்க்கமுதலியவற்றைத் தெரிவி
த்து இப்பண்டங்களைப் பொல்லாப்பிள்ளையார்க்கு இப்போதே நிவே
தனஞ்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர்-என்க.

நம்பியரசன்சொன்னவார்த்தைகேளா-நன்றுனதுபணி
யென்னவருளாலுன்னித், தும்பிமுகனடிபணிந்து மன்ன
னிங்குத்-தொகுத்தனநீயமுது செயவேண்டுமென்னக்,க
ம்பமதக்களிற்றுமுகத்தானுமங்குக் கருத்தினுட னம்பியு
ளைக்கிசைந்துகாட்ட, விம்பரினில்வந்தனநாற்சுத்திசெய்
தே-யிருந்தவெலாம்படைக்கவவனேற்றல்செய்தான்(அ)

கோ. மா. ப ஞ. சபாபதி 20 ௳ 1873 ௵



மூவர்முதலிகள் திருமுறைக்கு யாழ்ப்பாணப்பெண் பண்ணடைவுஇசைத்தது.

(இ-ள்.) மகாராஜாவானவர் தம்மைப்பிரார்த்தித்த விண்ணப்பத்தைக்கேட்டருளி உமது திருப்பணி நன்றென்று நம்பியாண்டார் நம்பி கிருபையால் தியானித்துப பொல்லாப்பிள்ளையாரது திருவடியைவணங்கி ராஜாவானவ ரிவ்விடத்திற் கொணர்ந்தனகளைத் தேவரீர் அமுது செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய நிலைபெற்றமதத்தையுடைய யானைமுகக்கடவுளும் அவ்வாறு திருவுளப்பாங்காய் நம்பியின் விண்ணப்பத்திற் கிசைந்தருளலும் இப்பதியினிடத்துவந்த அப்பண்டங்களை நால்வகைச் சுத்தியுஞ்செய்துபடைக்க அவற்றையெல்லாம் பிள்ளையார் அமுதுசெய்தருளினர்-என்க.

புகர்முகக்கைபுறப்பட்டேவேபடைத்தவெல்லாம் புகுந்த
விடமறியாமற்*போனபின்னை, யகநெகிழமெய்யரும்பிக்க
ண்ணீர்வார-நம்பிகழலன்பினலரசன்போற்றி, மிகவுமொ
ருவிண்ணப்ப மடியேற்குண்டு வேதியனேகேளென்றுவி
ளம்புவான்மெய்ப், புகழது சேர் மூவர்தமிழ் தொண்டர்
செய்திபூதலத்தில்விளங்கவெனப்போற்றிநின்றான். (௯)

(இ-ள்.) விநாயகரதுபுள்ளிபரந்தமுகத்திலுள்ள துதிக்கையானது வெளிப்படலும்படைத்தபண்டங்களெல்லாம்போனவிடந்தெரியாமற போய்விட்டன-பின்புமனமுருகவுடல்பூரித்துக்கண்ணீர்பெருக அன்புடனேநம்பியாண்டார்திருவடிகளைமகாராஜாவானவர்நமஸ்கரித்து இன்னுமொருவிண்ணப்பம் அடியேனுக்குளது-வேதியரே-கேட்டருள்வீரென்றுவிளம்புகின்றனர்அஃதுஅழியாப்புகழ்மை சேர்ந்துள்ள மூவர்முதலிகள் திருமுறையுந திருத்தொண்டர் வரலாறும் இவ்வுலகின்கண் விளங்கவேண்டுமென்பதே யெனச்சொல்லித்துதித்துநின்றனர்.என்க

அந்தவுரைகேட்டலுமங்கரசன்றன்னை நம்பிமகிழ்ந்தரு
ள்புரிவானருள்சேர்மூவர், செந்தமிழ்களிருந்தவிட மன்
பருள்ளோர்-செய்திக்கவ்விநாயகன்றாள்சிந்தித்தெந்தா,ய
ந்தவகையேதென்றுகேட்டாலெந்தை-மகிழ்ந்தருளு மந்
நெறியைவழாதுனக்குத், தந்திடுவன்மன்னபொறுவென்
றுசொல்லித்-தந்திமுகன்சந்நிதியிற்றாழ்ந்துசென்றான்(௰)

(இ-ள்.) அவ்விண்ணப்பத்தைக் கேட்டவுடன் நம்பியாண்டார் மகாராஜாவைமகிழ்ந்து சொல்லுவார் திருவருள்பெற்ற மூவர்திருநெறித் தமிழிருக்குமிடத்தின்பொருட்டும் திருத்தொண்டர் வரலாற்றின்

* போயினவென்பது-போனவெனத்தொகுக்கப்பட்டது.

பொருட்டும் அவ்விநாயகருடைய பாதங்களைத்தியானித்து எந்தையே
அவ்விவரம் ஏதென்று பிரார்த்தித்து வேண்டினால் எமது தந்தையாகி
ய விநாயகரும் முனிவின்றித் தெரிவித்தருள்வர் அவ்விதத்தை யுமக்கு
த்தவறுமல் தெரிவிப்பேன் அரசனே பொறுத்திருக்கவென்றுசொல்லி
ப் பிள்ளையாரது சந்நிதிக்கண்வந்துபணிந்துஉள்ளேபுகுந்தனர்-என்க.

சென்றுபணிந்திபமுகத்தோன் பாதப்போதைச் சென்
னியில்வைத்தவனருளிற்றிளைத்துச்சிந்தை, யொன்றுமற
வுருகிவிழிதாரைகொள்ள - வுண்மையினால்வந்தித்தங்கு
வாவோன்றன்னை, யின்றமிழ்சேர்மூவர்தமிழிருந்தவெல்
லையெல்லையில்சீர்த்திருத்தொண்டரியல்புமூர்த்தி,○நன்று
மருள்செய்தருளவேண்டுமென்ன நாகமுகனம்பிக்குநவி
லலுற்றான். (௰க)

(இ-ள்.) அவ்வாறுபுகுந்து யானைமுகக்கடவுள் பாதத்தைத் தம
துசிரத்திலவைத்துஅவரதுதிருவருள்வசத்தராய்-சித்தவிகற்பம்சிறிது
மின்றியுருகிஆநந்தக்கண்ணீர்தாரைபெருக உள்ளபடிவந்தனைசெய்து
பிள்ளையாரைநோக்கி இனியமதுரம்பொருந்திய மூவர் திருநெறித்தமி
ழ்வேதம்இருக்குமிடமும் அளவிடற்கரிய சீர்மையுள்ளதிருதொண்ட
ர்வரலாறும் தெரியும்படியானைமுகமூர்த்தியே ஐயமறத்தேவரீர் அரு
ள்புரியவேண்டுமென்றிரக்க யானைமுகக்கடவுளும் நம்பிக்குத் திருவா
ய்மலர்ந்தருள்வாராக-என்க.

வார்ந்தருட்கணீர்சொரியநம்பிகேட்ப-வண்டமிழ்களி
ருந்தவிடமன்றுளாடுந, கூர்ந்தவிருட்கண்டர்புறக்கடை
யின்பாங்கர்க்-கோலமலர்க்கைகளடையாளமாகச், சார்ந்
தனவென்றருள்செய்துதொண்டர்பேறுஞ் சாற்றுதலாற்
சகதலத்தோரருளைச்சார, வார்ந்ததமிழிருந்தவிடமன்பர்
செய்தி-யத்தனையு*நம்பிமனத்தருளிற்கொண்டார். (௰உ)

(இ-ள்.) அவ்வாறு கண்களில் ஆநந்தபாஷ்பம்சொரியும்படி நம்
பியாண்டார் பிரார்த்தித்தபோது அத்திருமுறைகள் இருக்குமிடம் ம
ன்றுள் நடித்தருளுகின்ற நீலகண்டராகிய நடேசரது சிற்சபையின்பு
றத்தே அம்மூவரது அழகிய மலர்போன்ற அஸ்தமுத்திரைக் குறியிட்
டுச் சேமித்திருக்கின்றனவென்றுரைத்துத் திருத்தொண்டரது வர

---

○ நன்றுஉம்அருள்எனப்பதம்பிரித்துக்கொள்க-இதுவழுவமைதி.
* நம்பியருளிற்கொண்டாரென்பதும்-அது.

லாறுஞ்சொல்லி யருளினபடியால் உலகுயிர்கள் பரமசிவத்தின் அருளையடைதற்பொருட்டு முற்றியதிருநெறித்தமிழ்சேமித்தலுடனும் அடியார்கள் சரித்திரமவ்வளவும் நம்பியாண்டார் தமதுள்ளத்தின்கண் திருவருட்சார்பினால் மனனம்செய்துகொண்டனர்-என்க.

கொண்டுகுலசேகரனுங் கோன்பால்வந்து குஞ்சரத்
தோனருள்செய்தகொள்கையெல்லா, மண்டுபெருங்காத
லுடன்சொல்லியந்த வண்டமிழின்பெருமைதனை வகுத்
துச்சொல்வார்,கண்டபெருமந்திரமேமூவர்பாடல்-கைகா
ணுமந்திரங்கண்ணுதலோன்கூற, லெண்டிசையுஞ்சிவன
ருளைப்பெறுதற்காக விம்மொழியின்பெருமையையாணிய
ம்பக்கேணீ. (௰௩)

(இ-ள்.) அவ்வாறுசிந்தித்துக்கொண்டு குலசேகர சோழமகாராஜரிடத்தில்வந்து பிள்ளையார் அருளிச்செய்த வரலாறு முற்றும் அதிகரிக்கின்ற பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்து அத்திருநெறித்தமிழின் மகிமையை வகையுறசசொல்லுகின்றார் மூவர்களோதிய திருமுறைகள் கைகண்ட மகாமந்திரங்களாம் பரமசிவம் ஓதியவேதங்கள் கைகாணுமந்திரங்களாம் எட்டுத்திசையிலுள்ளஆன்மாக்களும் பரமசிவத்தின் திருவருளைப்பெறுமாறு இத்திருநெறித்தமிழ்வேதத்தின் பெருமையை யாம்சொல்வோம் நீவிர்கேட்க-என்க.

. சேடர்மலிகாழிநகர் வேந்தர்தாமுந்- தேவர்புகழ்திருத்
தோணிச்சிவனார்பங்கிற், பீடுடையவுமைமுலைப்பா லரு
ளாலுண்டு பிஞ்ஞகனைச்சினவிடைமேற் பெருகக்கண்டு,
தோடுடையசெவியன்முதற்கல்லூரொன்னுந் தொடைமுடி
வாப்பரசமயத்தொகைகண்மாளப், பாடினார்பதிகங்கள்பா
விலொன்றும்-பதினாறுபிரமுளதாப்பகருமன்றே (௰௪)

இ-ள். அறிவுடையோர்தங்குகின்ற சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் தேவர்களேத்துகின்ற திருத்தோணியப்பரது இடதுபாகத்திருக்கும் பெருமையுள்ள பார்வதியாரது திருமுலைப்பாலைச் சிவபெருமானகருணையினாலுண்டு திருத்தோணியப்பரை வீரமுடையருஷபவாகனத்தின்மேல ஆநந்தத்துடன் தெரிசித்துத் தோடுடையசெவியனென்னும் பதமுதல் கல்லூரொன்றும் பதிகமிறுதியாக அந்நியசமயக்கூட்டங்கள் பிறபட்டொழியும்படி ஓதியருளினர் - அத்திருபதிகங்கள் பறுவலிற்சிறப்பாகியபதினாறுபிரமுள்ளனவாகச் சொல்லப்படும்- என்க.

திருநாவுக்கரையனொன்றுஞ்செம்மையாளர் தீயமணர்சிறை
நீங்கவதிகைமேவுங், குருநாமப்பரஞ்சுடரைப்பரவிச்சூலை
கொடுங்கூற்றாயினவென்ன வெடுத்துக்கோதி, லொருமா
னைத்தரிக்குமொருவனையுங்காறு மொருநாற்பத்தொன்ப
தினாயிரமதாகப், பெருநாமப்புகலூரிற்பதிகங்கூறிப் பிஞ்
ஞகனாரடியிணைகள்பெற்றுளாரே. (௰௫)

(இ-ள்.) திருநாவுக்கரையனென்னுஞ் செவ்வியகுணத்தையுடைய அப்பர்சுவாமிகள் கொடிய சமணர்களது சிறையினின்று நீங்கத் திருவதிகையிற் கோயில்கொண்டருளிய வீரட்டானேசுரரைக் கொடிய சூலைநோய்காரணமாகக் கூற்றாயினவென்று முதல்தொடங்கிய பதிகமுதல் ஒருமானைத்தரிக்கு மொருவனையுமென்னும்பதிகமீறாகநாற்பத்தொன்பதினாயிரம் திருப்பதிகங்கள் ஓதியருளி மிக்கபுகழுள்ளதிருப்புகலூரிற் பரமசிவத்தின்திருவடியைச்சேர்ந்தனர்-என்க.

பின்புசிலநாளின்கணூரூர்நம்பி-பிறங்குதிருவெண்ணெ
ய்நல்லூர்ப்பித்தாவென்னு, மின்பமுதற்றிருப்பதிக மூழி
தோறு-மீறாமுப்பத்தெண்ணாயிரமதாக,முன்புகன்றவர்
நொடித்தான்மலையிற்சேர்ந்தார் முறைகளெல்லாந்திருத்தி
ல்லைமூதூர்தன்னி, லன்றவர்கையிலச்சினையால் வைத்தா
ர்மன்ன-வாராய்ந்துதருகவெனவருளிச்செய்தார் (௰௬)

(இ-ள்.) சிலநாள்பிறகு சுந்தரமூர்த்திசுவாமிகள் சிறந்ததிருவெண்ணெய்நல்லூரின்கண் பேரின்பத்தைத்தருகின்ற பித்தாவென்னும் முதன்மொழியுள்ள திருப்பதிகமுதல் ஊழிதோறும்என்னும் பதிகமீறாக முப்பத்தெண்ணாயிரம்பதிகங்கள் ஆதிகாலத்திலோதியருளினவராய்த் திருக்கயிலையிற்சென்றமர்ந்தனர் - அத்திருமுறைகள் அனைத்தும் திருத்தில்லைப்பதியின்கண் அக்காலத்திற் சமயாசாரியராகிய அம்மூவரும் தமது அஸ்தமுத்திரையிட்டுச் சேமித்துவைத்தனர்- ஆதலால் அரசனே - அவற்றைஆராய்ந்து தரவேண்டுமென்றுசொல்லியருளினார்-என்க,

அருமறையைச்சிச்சிலிபண்டருந்தத்தேடு மதுபோல
ன்றிதுவென்றுமுளதாமுண்மைப், பரபதமுந்தற்பரமும்
பரனேயன்றிப்-பலரில்லையென்றெழுதும்பனுவல்பூரி,னெ
ரியினிடை வேவாதாற்றெதிரேயோடு - மென்புக்குமுயி
ர்கொடுக்குமிடுநஞ்சாற்றுங், கரியைவளைவிக்குங்கன்மிதக்கப்பண்ணுங்-கராமதலைகரையினுறக்காற்றுங்காணே. ()

(இ-ள்.) பூர்வத்தில்அருமையாகிய வேதத்தைச்சிச்சிலிப்பறவைவி ழுங்கினதால்அதைக்காணாமல்தேடினதுபோலல்ல.இத்திருமுறையென் றும்நிலைபெற்றதாகும் சத்தியப்பொருளாகியபரபதமும்தற்பரமும்பர மசிவமேயல்லாமல்பலகடவுள்இல்லையெனஎழுதியருளியபனுவலாகு ம் உலகின்கண் அது நெருப்பில்வேகாது - ஆற்றுப்பெருக்கில் எதிரே திவரும் சுட்டஎலும்புக்கும் உயிர்கொடுக்கும்இட்டவிஷத்தைமுறிக்கு ம்-மதயானையைவணங்கப்பண்ணும்-கருங்கல்லைக்கடலில்மிதக்கப்பண் ணும்-மடுக்கரையில முதலையானது பிள்ளையைக்கக்கும்படி செய்யும்-அ தன்மான்மியத்தைய‌றிக- என்க.

என்றென்று நம்பிக் குப்பரிவாலுண்மையின்றமிழின்பெரு மைதனையியம்பக்கேட்டுக், குன்றொன்றுபெருருவங்கொ ண்டாற்போலுங் குருசரக்தோனருளினையுட்கொண்டும னன்,மன்றிளிடனுசென்றுமறையோர்களொண்டர்-வா ர்சடையோர்காவலுடைமரபோர்க்கெல்லா, நன்றெங்கள் கணபதிதன்சொல்லிதென்று நன்மையுடன்மன்னவனுர்ந விலுங்காலை. (ருஅ)

(இ-ள். என்றிவ்வாறு நம்பியாண்டார்க்கு தயையாய் மெய்ப் பொருளாகிய இனியதிருநெறித தமிழ்வேதத்தின்பெருமையை விநா யகர் உபதேசித்தருளியவாறு நம்பியாண்டார் தமக்குச்சொல்லியருள கேட்டு- குலசேகரமகாராஜாவானவர ஒருமலையானது பெரியவுருவ ங்கொண்டாறபோன்றுள்ள பொல்லாப்பிள்ளையாரது திருவருளையுள் ளத்திற்கொண்டு சிதம்பரத்தின்கண்வந்து தில்லைவாழந்தணர் மூவாயி ரவர்க்கும் * அடியார்களுக்கும் 0 மடபதிகளுக்கும் ... அகம்படிமை தொழிலினர் முதலியஅனைவர்க்கும்நமது பொல்லாப்பிள்ளையார்சொ ல்லியருளிய முறையின்னதென்று மனக்களிப்புடன் தெரிவித்தபோ தில - எனக.

அத்தகையோர்தமிழ்வைத்தமூவர்வந்தா லறைதிறக்குமெ னவுரைக்கவரசன்றானு, மெய்த்தருசிரம்பலவர்க்குற்றசெ ல்வ விழாவெடுத்துவிளம்புதமிழ் மூவர்தம்மை,யுய்த்த ணிவீதியினிலுலாவருவித்தும்பர்- நாயகன்றன்கோயில்வ

* நாற்பதெண்ணாயிரம்மகேசுரர்கள்.
0 எழுநூறுதிருமடத்துமுதலிகள்.
... ஏழாயிரத்துத்தொளாயிரவராகிய கோயில்திருத்தொண்டு செய்பவர்கள்.

லமாக்கியுள்ளே,சித்தமெலாமுருக்குந்தமிழிருக்கைசேரச்
சேர்த்தியவர்சேர்ந்ததெனச்செப்பினின்றான்· (௰௯)

(இ-ள்.) அவ்வாறுகேள்வியுற்ற தில்லைவாழந்தணர் முதலாயினோர் திருநெறித் தமிழ்வேதத்தைச்சேமித்துவைத்த (சமயாசாரியராகிய)மூவரும் வந்தால் அச்சேமித்த அறைதிறக்குமென்று சொல்லுதலும்மகாராஜாவும் மெய்ம்மையுள்ள சிறப்பையுடையநடேசர்க்கு விபவம்பொருந்திய திருவிழாச்செய்து திருமுறையோதியருளிய மூவரையும்எழுந்தருளப்பண்ணித் திருவீதியில் உலாவருவித்து நடராஜரது திருக்கோயிலினுள்ளே பிரதக்ஷிணம்பண்ணுவித்து ஆன்மாக்களதுசித்தத்தையெல்லாம்உருக்காநின்ற திருமுறைச்சேமத்தின்கண் கொணர்ந்துசேர்த்தினபடிசேர்ந்ததென்று சொல்லிநின்றனர்-என்க.

ஐயர்நடமாடுமம்பலத்தின்மேல்பா-லருள்பெற்றமூவர்த
மதருள்சேர்செய்ய, கையதுவேயிலச்சினையாயிருந்தகாப்
பைக-கண்டவர்களதிசயிப்பக் கடைவாய்நீக்கிப், பொய்யு
டையோ ரறிவுதனைப்புலன்கண்மூடும் - பொற்பதுபோற்
போதமிகும்பாடறன்னை, நொய்யசிறுவன்மீகமூடக்கண்
டு-நொடிப்பளவினிற்சிந்தைநொந்தவேந்தன் (௨௰)

(இ-ள்.) சிவபெருமான் திருநடனஞ்செய்கின்றசிற்சபையின்மேல்பால்திருவருள்பெற்றமூவரும்தமதுகருணைசேர்ந்தசெவ்வியதிருக்கரமே அடையாளமாகப்பொறித்திருந்த சேமத்தைப் பார்த்தவர்கள்அதிசயிக்கக் கதவைத்திறந்து பொய்ம்மையுடையோர்களது அறிவைப் புலன்கள்மறைத்திருக்குந்தன்மைபோல் சிவஞானம்பயத்தலின்மிக்கதாயிருக்கின்ற திருமுறையை நொய்மையாகிய சிறிய செல்லுப்புற்றானது மூடியிருக்கப்பார்த்து அந்நிலையேமனம்வருந்திய மகாராஜாவானவர்-என்க.

பார்த்ததனைப்புறத்துய்ப்பவுரைத்துமேலே-படிந்திருந்த
மண்மலையைச்சேரத்தள்ளிச், சீர்த்ததிலதயிலமலிகும்பங்
கொண்டு செல்லுநனையச்சொரிந்துதிருவேடெல்லா, மா
ர்த்தவருளதனாலே யெடுத்துநோக்க வலகிலாவேடு-ழு
தாகக்கண்டு,தீர்த்தமுடிக்கணிபரனேபரனேயென்னச்-சி
ந்தைதளர்ந்திருகணீர்சோரநின்றான் (௨௧)

(இ-ள்.) அவ்வாறுபார்த்த திருமுறையைப் புறத்தேயெடுத்துவைக்கும்படி கட்டளையிட்டு மூடியிருந்த புற்றுமண்குவையை முழுதுநீக்கித் தெளிவாகிய எண்ணெய்க்குடங்களால்செல்லுநனையும்படியூற்றித்

திருவேடெல்லாவற்றையும் மிக்கதிருவருளா லெடுத்துநோக்குதலும்-அளவற்றஏடுகள்பழுதாயிருக்கக்கண்டு கங்கையைச்சடையில் அணிந்தபரமனே பரமனேஎன்றுவாய்விட்டுச்சிந்தைதளர்ந்துஇரண்டுகண்களிலும்நீர்பெருகும்படித் துயரமுற்றுநின்றனர்-என்க.

ஏந்துபுகழ்வளவனிவ்வாறன்பினாலே யிடர்க்கடலின்க
ரைகாணாதிளையுங்காலைச், சார்ந்தமலைமகள் கொழுநனரு
ளால்வேதச் சைவநெறித்தலைவரான மூவர்பாடல், வேய்
ந்தனபோன்மண்மூடச்செய்தேயீண்டு வேண்டுவனவைத்
தோமென்றுலகிலுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்
குமாற்றால்-வானகத்திலோரோசையெழுந்ததன்றே.(௨௨)

(இ-ள்) விரிந்தபுகழையுடைய சோழமகாராஜாவானவர் சிவநேசத்துடன் இவ்வாறுதுன்பமாகிய சமுத்திரத்தின் கரைகாணாமல்வருந்தினபோது இடப்பாகத்திலிருக்கின்றபார்வதியார்மணவாளரது திருவருளால் வேதசித்தாந்த சைவசமயத்தலைவராகிய மூவரதுதிருப்பாடல்களைக்கவசமிட்டாற்போல் மண்ணால்மூடும்படிசெய்து இக்காலத்திற்கு வேண்டுவனவற்றைத் தெரியும்படிவைத்தோமென்றுஉலகிலுள்ள மனிதர்களும் அரசனுங்கேட்கும்படி ஆகாயத்தின்கண் ஒருஓசையானது எழுந்தது-என்க:

அந்தமொழிகேட்டலுமேமன்னன்றானு மாடினன்பாடி
னனலக்கண்யாவுஞ், சிந்தினனமுதமுண்டான்போலநெ
ஞ்சந்-தேறினனம்பிதிருவடியிற்றாழ்ந்தான், பந்தமறுசிவ
னடியார்கொள்கவென்றப் பண்டாரந்திறந்துவிட்டான்ப
ரிவுகூர்ந்தான், இந்தவகைப்பெருங்களிகொண் மன்னன்
றானு மெழின்முறையைமுன்போலவகுக்கவெண்ணி. ()

(இ-ள்.) அவ்வசரீரித்திருவாக்கைக் கேட்டமாத்திரத்தில் மகாராஜாவும் ஆநந்தக்கூத்தாடினர் பாடினர் தமது உள்ளக்கவலைமுற்றும்நீங்கினர் தேவாமிர்தங்கிடைத்து உண்டாற்போல மனக்குறைநீங்கினவராகி நம்பியாண்டாருடைய திருவடிகளில்வணங்கி அவிச்சைத்தொடக்கைநீக்கியசிவனடியார்கள்கொள்ளக்கடவதென்று அன்புமிகுந்து பொக்கிஷச்சாலையைத் திறந்துவிட்டார் - இவ்வாறு பேரானந்தவசத்தராய்ச் சோழமகாராஜாவும் தெய்வத்தன்மையுள்ளதிருமுறையை முன்னாளிலிருந்தவாறு வகைப்படுத்தும்படி நினைந்து-என்க.

மன்னுதமிழ்விரகரெங்கள்காழிவேந்தர் - வகுத்தருளா
லமைத்ததிருமுறையோமூன்றும், அன்னவகைவாகீசர்மு

றையோர்மூன்று மாரூரருணாத்திருமுறையதோன்றுங்,
துன்னவகையேழாகத்தொகுத்துச் செய்தான்– றூயமந்தி
வெழுகோடியென்பதுனரித், தன்னிகரிறிருவருளான்ம
ன்னன்ருனுந் தாரணியோர்விடுபெறுந் தன்மைசூழ்ந்தே.

(இ-ள்.) நிலைபெற்ற திருநெறித்தமிழ்விரகராகிய எமதுதிருஞான சம்பந்தப்பிள்ளையார், சிவபெருமான் அருளால் வகுத்துச்சொல்லிய திருமுறைகள் ஒருமூன்றும், அவ்வாறு திருநாவுக்கரசுசுவாமிகள்சொல்லிய திருமுறைகள் ஒருமூன்றும், சுந்தரமூர்த்திசுவாமிகள் ஓதிய திருமுறை ஒன்றுமென, அவற்றின்வகுப்புஏழாகததொகுத்தனர்- தூய்மையான மந்திரங்கள் ஏழுகோடியாயிருக்கின்றவகையை அநுசரித்துத் தனக்குத்தானேயிணையாகிய திருவருளைமுன்னிட்டுச் சோழமகாராஜாவும் உலகத்திலுள்ளோர் பேரின்பவீடுபெறுகின்ற தன்மையையாலோசித்து-என்க.

பண்புற்றதிருஞானசம்பந்தர்பதிகமுந்நூற்
றெண்பத்திநான்கிநலிலங்குதிருமுறைமூன்று
நண்புற்றநாவரசர்முந்நூற்றேழ்மூன்றினால்
வண்பெற்றமுறையொன்றுநூற்றினல்வன்றொண்டர் (உரு)

(இ-ள்.) நன்மைமிகுந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் பதிகம் முந்நூற்றெண்பத்திநான்குபாசுரங்களால திருமுறைகள்மூன்றும் சிவநேசமிக்க திருநாவுக்கரசுசுவாமிகள் பதிகம் முந்நூற்றேழுபாசுரங்களால் திருமுறைமூன்றும் அருள்வளம்பெற்ற சுந்தரமூர்த்திசுவாமிகள்பதிகம் நூறுபாசுரங்களால் திருமுறையொன்றுமாம-என்க.

ஆகவளர்திருமுறையேழருட்டிருவாசகமொன்று
மோகமெறிதிருவிசைப்பாமாலைமுறையொன்றுசிவ
போகமிகுமந்திரமாமுறையொன்றுபுகழ்பெறவே
பாகமிகுந்திருமுறைகள்பத்தாகவைத்தார்கள். (உசு)

(இ-ள்.) இவ்வாறாக ஓங்குதிருமுறைகள்ஏழும்அருள்வாக்காகிய திருவாசகத்திருமுறையொன்றும் மோகமாகியசாட்டைப் பற்றறக்களைகின்ற திருவிசைப்பாமாலைத் திருமுறையொன்றும் சிவபோகமிகுந் திருமந்திரத்திருமுறையொன்றுமெனப் புகழ்பரவும்படி சத்திநிபாதத்தை மிகுவிக்கின்ற திருமுறைகள்பத்தாக ஏற்படுத்தினர்-என்க.

வைத்ததற்பினம்பிநறன்மன்னர்பிரான்மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதருமிறைமொழிந்ததிருமுகப்பாசுரமுதலா

வுயததபதிகங்களையுமொருமுறையாச்செய்கவெனப்
பத்திதருந்திருமுறைகள்பதினொன்றாப்பண்ணினார். (உஎ)

(இ-ள்.) அவ்வாறு ஏற்படுத்தியபின்பு நம்பியாண்டாரது திருவடியைமகிழ்வுடன் மகாராஜாவானவர்பணிந்து இஷ்டசித்தியைப் பிரசாதித்தருளுகின்ற சிவபெருமான்வரைந்தருளின திருப்பாசுரமுதலாகஎண்ணப்பட்ட திருப்பதிகங்களையும் ஒருதிருமுறையாகச்செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவாற்றால் அத்திவ்யப்பிரபந்தத்திருமுறையுஞ்சேர்த்துச் சிவபக்திநெறியைத்தருகின்ற திருமுறைபதினொன்றாகச்செய்தனர்-என்க.

மந்திரங்களேழுகோடியாதலினான்மன்னுமவ
ரிந்தவகைத்திருமுறைகளேழாகவெடுத்தமைத்துப்
பந்தமுறுமந்திரங்கள்பதினொன்றுமாதலினா
லந்தமுறைநான்கினொடுமுறைபதினொன்றாக்கினார். ()

(இ-ள்.) மகாமந்திரங்கள் சப்தகோடியாதலால்நிலைபெற்ற நம்பியாண்டார் இவ்வகைக்கேற்பத்திருமுறைகள் ஏழாகஏற்படுத்திவைத்து சேர்க்கையானமந்திரங்கள் பதினொன்றுமாதலால் அவைக்கேற்ப அவ்வேழுடன் திருவாசகத்திருமுறைமுதலியநான்குஞ்சேர்த்துத் திருமுறைகள் பதினொன்றாக அமைத்தனர்-என்க.

ஆக்கியபின்திருத்தொண்டத்தொகையடைவையருளாலே
நோக்கியபின்னடியார்நடங்கடைவுந்தொழிற்பேறும்
பாக்கியத்தாலிபமுகத்தோனருள்செய்தபகுதியினால்
வாக்கியல்சேரந்தாதிநம்பியடைவேவகுத்தார். (உகூ)

(இ-ள்.) அவ்வாறு அமைத்தபின்னர் சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையின்முறையைத் திருவருளால் ஆராய்ந்தபின்னர் அத்திருத்தொண்டர்களதுஅருமையானவரலாற்றையும் திருத்தொண்டுகளையும் அவர்கள் அடைந்தபேறுகளையும் சுபகரமாகப் பொல்லாப்பிள்ளையார் உபதேசித்தருளியமுறைமைப்படி நம்பியாண்டார் தமதுதிருவாக்கால் இலக்கணம்அமைந்த திருவந்தாதி [illegible]றிமுறையே வகைநூலாகச்செய்தருளினார்- என்க.

சீரருள்சேராறுபத்துமூவர்தனித்திருக்கூட்டந்
சாருமவரொன்பானுந்தண்டமிழாறுனாசெய்து
பேரிசையாம்வகையடைவுபுவியர் ாடைப்பெருமையினாற்
சீருலவுதிருவெருக்கத்தம்புலியூர்சென்றடைந்தார். (௩௰)

(இ-ள்.) திருவருளையடைந்த அறுபத்துமூவர் தனித்திருப்பெரும் திருக்கூட்டமாகச்சேர்ந்த அடியார் ஒன்பதின்மருமாகிய இவர்களது வரலாற்றை இனியதமிழ்த்திருவந்தாதியாலுரைத்து மூவர்திருமுறைகளுக்கு இசைவகைகளைப்பெறவேண்டி இப்புவிக்கண் பெருமையால் மேம்பட்டிருக்கின்ற * திருவெருக்கத்தம்புலியூரென்னுந் தலத்திற்போய்ச்சேர்ந்தனர்- என்க.

சென்னியருணம்பியிவரந்நகரைச்சேர்ந்துசிவன்
மன்னுதிருக்கோயிலினைவலங்கொண்டுபணிந்தரனே.
யின்னிசைதந்தருளென்னவிரக்கமுடன்குறைந்திரப்பக்
கன்னியொருபங்குடையோனருள்செய்தகடனுரைப்பாம் (௩௧)

(இ-ள்.) சோழமகாராஜாவும் அருள்பெற்றநம்பியாண்டாரும்இவர்முதலாயினோரும் அத்தலத்தின்கண்வந்து பரமசிவம் வீற்றிருக்கின்ற திருக்கோயிலைப் பிரதக்ஷிணம்பண்ணி நமஸ்கரித்துத்திருமுறைகட்கு இனியஇசைதந்தருளவேண்டுமென்று கனிவுடன் குறையிரந்துவேண்டலும் பார்வதியாரை யொருபாகத்திலுடைய இறைவர்அருளிச்செய்தமுறைமையைச்சொல்வாம்- என்க.

நல்லிசையாழ்ப்பாணனார்நன்மரபின்வழிவந்த
வல்லியொருத்திக்கிசைகள்வாய்ப்பவளித்தோமென்று
சொல்லவவடனையழைத்துச்சுருதிவழிப்பண்டழுவு
நல்லிசையின்வழிகேட்டுநம்பியிறையுண்மகிழ்ந்தார். (௩௨)

(இ-ள்.) இனிமையானஇசைநூலில்வல்ல திருநீலகண்டயாழ்ப்பாணனாரது திருமரபிற்பிறந்துள்ள ஒருபெண்ணுக்கு திருமுறைகட்குரிய இசைத்திறங்களினது தேர்ச்சிசித்திக்கும்படி தந்தருளினோமென்று பரமசிவம் அநுக்கிரகிக்க அப்பெண்ணைவருவித்துச் சுருதிமுறையாழ்பண்கள்பொருந்துகின்ற இனியஇசைத்திறங்களைக்கேட்டு நம்பியாண்டாரும் சோழமகாராஜாவும் உள்ளங்களித்தனர்-என்க.

ஆங்கவளையம்பலத்துளாடுவார்திருமுன்பே
பாங்கினுடன்கொடுவந்துபண்ணடைவுபயில்பாட
லோங்கருளான்முறைபணித்தற்கொக்குமெனவோரோசை
நீங்கரியவானின்கணிகழவரசன்கேட்டான். (௩௩)

(இ-ள்.) அவ்வாறே அப்பெண்ணை அம்பலத்தில்ஆடுகின்ற நடேசரதுசந்நிதியில் சிறப்புடன் அழைத்துவந்து பண்களின்முறைதழுவி

* நடுநாட்டிலுள்ளசிவஸ்தலங்கள் இருபத்திரண்டுள்ஒன்று.

ன்றதிருநெறிப்பனுவல்களைப் பெருகுகின்றதிருவருளால் முறையேயா ளுதல் தகுதியாமென்று ஒரு அசரீரிவாக்கானது நீக்கமில்லாதஆ காயத்தின்கண்உண்டாக அதனைச்சோழமகாராஜாகேட்டனர்.

மன்னனுக்குநம்பிக்குமறையவர்மூவாயிரவர்
பன்னரியதிருத்தொண்டர்பலதுறையோர்க்குங்கேட்க
வின்னருண்முன்வியந்துரைத்த விவண்முதலாவிசைத்தவிசை
தென்னிலமேன்மிகத்தோன்றத்திருவருளாற்றோன்றியதாம். ()

(இ-ள்.) அங்ஙனம்சோழமகாராஜவுக்கும் நம்பியாண்டார்க்கும் தில்லைவாழந்தணர் மூவாயிரவர்க்கும் எண்ணுதற்கரிய திருத்தொண்டர்களுக்கும் இன்னும்பலஇடத்திலுமிருந்தும் வந்தவருமாகியயாவர்க்கும்அவ்வசரீரிவாக்குக்கேட்டளவில் இனியதிருவருள்முன்னிலையில் அதிசயிக்கச்சொல்லிய இவளே முதன்மையானவளாகப்பாடிய இசைத்திறமானது தென்தேசத்தின்கண் மிகவும்விளங்கும்படி பரமசிவத்தின் அருளால் சித்தித்ததாம். என்க. [இவண்முதலாயென்பதற்கு இச்சிதம்பரக்ஷேத்திரமுதலாகஎனவுரைத்தலுமொன்று.]

சொன்னட்டபாடைக்குத்தொகையெட்டுக்கட்டளையா
மின்னிசையாற்றருந்தக்கராகத்தேழ்கட்டளையாம்
பன்னுபழந்தக்கராகப்பண்ணின்மூன்றுளதா
முன்னரியதக்கேசிக்கோரிரண்டுவகுவித்தார். (௧௫)

(இ-ள்.) பாடாநின்ற நட்டபாடையென்னும் பண்ணுக்குத்தொகுதியான எட்டுக்கட்டளையாகும்- மதுரமுள்ள இசையொடுபொருந்திய தக்கராகமென்னும்பண்ணுக்கு ஏழுகட்டளையாகும் - சொல்லுகின்றபழந்தக்கராகப்பண்ணுக்கு மூன்றுகட்டளையுள்ளனவாம் - எண்ணுதற்கரியதக்கேசிப்பண்ணுக்கு இரண்டுகட்டளையுள்ளனவாகவகுவித்தனர்.

மேவுகுறிஞ்சிக்கஞ்சுவியாழகுறிஞ்சிக்காறு
பாவுபுகழ்மேகராகக்குறிஞ்சிப்பாவிரண்டு
தேவுவந்தவிந்தளத்தின்செய்திக்குநான்கினிய
தாவில்புகழ்க்காமரத்தின்றன்மைதனக்கிரண்டமைத்தார் (௧௬)

(இ-ள்.) நன்மைபொருந்தியகுறிஞ்சிப்பண்ணுக்கு ஐந்துகட்டளையும்- வியாழகுறிஞ்சிப்பண்ணுக்கு ஆறுகட்டளையும் - பரந்தபுகழுள்ள மேகராகக்குறிஞ்சிப்பண்ணுக்கு இரண்டுகட்டளையும் - பரமசிவம்விரும்புகின்ற இந்தளப்பண்ணுக்கு நான்குகட்டளையும் - குற்றமற்றசீருள்ள மதுரமானகாமரமென்னும்பண்ணுக்கு இரண்டுகட்டளையுமாக அமைத்தனர் - என்க.

காந்தாரமாகியபியந்தையாங்கட்டளைக்கு
வாய்ந்தவகைமூன்றாக்கிவன்னட்டராகத்திற்
கேய்ந்தவகையிரண்டாக்கிச்செவ்வழியொன்றாக்கியிசைக்
காந்தாரபஞ்சமத்தின்கட்டளைமூன்றாக்கினார். (கூஎ)

(இ-ள்.) பியந்தைக்காந்தாரமென்னும் பண்ணுக்குப்பொருந்தியக ட்டளைவகைமூன்றும்- வன்மையானநட்டராகத்துக்குக்கட்டளைவகை இரண்டும்- செவ்வழிப்பண்ணுக்குக்கட்டளைஒன்றும்- காந்தாரபஞ்சம மென்னும்பண்ணுக்குக்கட்டளைவகைமூன்றுமாகஅளவிட்டனர்-என்க.

கொல்லிக்குநாலாக்கிக்கௌசிகத்துக்கூறும்வகை
சொல்லிரண்டாக்கிமிகுதூங்கிசைநேர்பஞ்சமத்திற்
கொல்லையிணியொன்றாக்கிச்சாதாரிக்கொன்பதாப்
புல்லுமிசைப்புறநீர்மைக்கொன்றாகப்போற்றினார் .(கூஅ)

(இ-ள்.) கொல்லிப்பண்ணுக்கு நான்கும் - கௌசிகப்பண்ணுக்கு உள்ளவகையைச்சொல்லுங்கால் இரண்டும் - மிகுந்ததூங்கல் இசை பொருந்திய பஞ்சமத்திற்குத் தடைபடாதஒன்றும்- சாதாரிக்கு ஒன் பதும்- இசைதழுவியபுறநீர்மைக்கு ஒன்றுமாக க்கட்டளைகள்பொருத் தினர்- என்க.

அந்தாளிக்கொன்றாக்கிவாகீசரருந்தமிழின்
மூந்தாயபலதமிழுக்கொன்றென்றுமொழிவித்து
நந்தாதநேரிசையாங்கொல்லிக்குநாட்டியிரண்
டிந்தாங்குறுந்தொகைக்கோர்கட்டளையாவிரித்துரைத்தார். ()

(இ-ள்.) அந்தாளியென்னும்பண்ணுக்குக்கட்டளை ஒன்றாகவும்- அ மைத்து (இவைஆளுடையபிள்ளையார் திருமுறைப்பதிகங்கட்கு) அப்ப ர்சுவாமிகளது அருமைத்திருமுறையுள் முதன்மையான பலதிருப்பதி கங்களின் பண்களுக்கு ஒவ்வொருகட்டளையாகவமைத்து நிலைபெற்ற நேரிசைக்கொல்லிக்கு நிச்சயிக்குமிடத்துஇரண்டுகட்டளையும் இனிதா யொலிக்கின்றகுறுந்தொகைக்குஒருகட்டளையுமாகவிரித்தனர்- என்க.

தாண்டகமாம்பாவுக்கோர்கட்டளையாத்தாபித்தங்
காண்டகையார்தடுத்தாண்டவையரருடெய்யமுறைக்
கீண்டிசைசேரிந்தளத்துக்கிரண்டாகவெடுத்துரைத்து
நீண்டதக்கராகத்துக்கிரண்டாகநிகழ்வித்தார். (சய)

(இ-ள்.) திருத்தாண்டகமென்னும்பதிகத்திற்கு ஒருகட்டளையாகநி ச்சயித்து (திருவெண்ணெய்நல்லூரில்) அருளாளராகிய சிவபெருமா

ஞ்தடுத்தாட்கொண்டருளின சுந்தரமூர்த்திசுவாமிகள் ஓதிய திருமு றையுள்மிக்க இசைதழுவிய இந்தளத்திற்குக் கட்டளையிரண்டாக எடு த்துச்சொல்லி வளர்கின்ற தக்கராகத்துக்குக் கட்டளைஇரண்டாகநிக ழ்வித்தனர்-என்க.

கூறரியநட்டராகத்திரண்டுகொல்லிக்கு
வேறுவகைமூன்றாகமிகுந்தபழம்பஞ்சுரத்துக்
கேறுவகையிரண்டாக்கியின்னிசைதேர்தக்கேசிப்
பேறிசையூராக்கியதிற்காந்தாரம்பிரித்திரண்டாம்.  (சுகக

(இ-ள்.) சொல்லுதற்கரிய நட்டராகத்துக்கு கட்டளையிரண்டா) வும். கொல்லிப்பண்ணுக்கு வெவ்வேறுவகையில் மூன்றாகவும் - இனி மைமிக்க பழம்பஞ்சுரத்திற்கு ஏற்றவகை இரண்டாகவும்- ஏற்படுத்தி இனியஇசைமுற்றிய தக்கேசிக்குஆறாக்கி- அதில்நின்றும் காந்தாரபப ண்ணைது பிரிக்கப்பட்டு இரண்டுவகையாம்-என்க.

ஒன்றாகுங்காந்தாரபஞ்சமத்துக்கோரிரண்டா
நன்றானசீர்நட்டபாடைக்குநவின்றுளைக்கிற்
குன்றாதபுறநீர்மைக்கிரண்டாகுங்கூறுமிசை
யொன்றாகக்காமரத்துக்கொன்றாகப்போற்றினார்.  (சுஉ)

(இ-ள்.) காந்தாரபஞ்சமத்துக்கு இசைஒன்றாகவும்-,நன்மையமை ந்த சீர்மையுள்ளநட்டபாடையென்னும் பண்ணுக்கு இசைஇரண்டாக வும்- ஆராய்ந்துசொல்லுமிடத்து குன்றுதலில்லாத புறநீர்மைப்பண் ணுக்கு இரண்டாகவும்- சொல்லாநின்ற காமரப்பண்ணுக்குப் பொரு த்தமான இசைஒன்றாகவும்.நிருமித்தனர்.என்க.

உற்றவிசைக்குறிஞ்சிக்கோரிரண்டாகவகுததமைத்துப்
பற்றியசெந்துருத்திக்கொன்றாக்கிக்கவுசிகப்பாற்
றுற்றவிசையிரண்டாக்கித்தூயவிசைப்பஞ்சமத்துக்
கற்றவிசையொன்றாக்கியரனருளால்விரித்தமைத்தார்.  (சுங)

(இ-ள்.) குறிஞ்சிப்பண்ணுக்கு அமைந்த இசைஇரண்டாகவகுத்து எண்ணுதற்கரிய செந்துருத்தியென்னும்பண்ணுக்கு இசை ஒன்றாக்கி- கௌசிகப்பண்ணுக்குப்பொருந்திய இசைஇரண்டாக்கி நுட்பமானப ஞ்சமப்பண்ணுக்குஉரித்தானஇசை ஒன்றாக்கிஇவ்வாறு சிவபெருமான் திருவருளால்பண்ணடைவு விளங்கும்படியமைத்தனர்-என்க.

இந்தவகைச்சிவன்செவிப்பாலெக்கண்ணுந்தழைத்தோங்
வந்தமிலாவறுபத்துமூவரருளம்புவிமே
னந்திடமும்மலமுநல்லுலகோர்நீங்கிடச்
சிந்தையருட்சிவமாகத்தெளிவித்தானருட்சென்னி. (௪௪)

(இ-ள்.) இவ்வகையாகப் பரமசிவத்தின் திருச்செவிக்கேற்க எத்திசையும்பெருகவும் அழிவில்லாத அறுபத்துமூன்றுநாயன்மார்களது திருவருள் அழகிய உலகின்கண் வியாபிக்கவும் நிலையுலகத்தின்கண் உயிர்கள் மலரகிதமாகிமுத்திபெறவும் சிந்தையானது அருள்மேனியாகிய சிவாகாரமாகநின்று யாவரையுங் கடைத்தேற்றுவித்தனர் - ஜீவகாருண்ணியத்தையுடைய ராஜராஜஅபயகுலசேகர மகாராஜாவானவர்-என்க.

சீராருந்திருமுறைகள்கண்டதிறற்பார்த்திபனு
மோராருமிறைவனையுமெழிலாருநம்பியையு
மாராதவன்பினுடனடிபணிந்தங்கருள்விரவச்
சோராதகாதன்மிகுந்திருத்தொண்டர்பதந்துதிப்பாம். (௪௫)

(இ-ள்.) சிறப்புமிக்க திருமுறைகளையெடுத்துத்தந்தருளிய பத்திவைராக்கியமுள்ள சோழமகாராஜாவாகிய அருள்நிறைந்த முதல்வனையும் சிவஞானமிக்க நம்பியாண்டாரையும் இடையறாத வுள்ளன்புடனே திருவடிகளில்வணங்கி அவ்வாறே மலபரிபாகங்கிடைக்கும்படிச்சோர்வில்லாத சிவநேசமிக்க திருத்தொண்டர்பாதங்களைத்துதிசெய்வாம்-என்க.



திருமுறைகண்டபுராண

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௫.

